# கல்கி

குடும்பத்துடன் களிக்க...

KALKI
9.2.2006 ரூ.8.00
96 பக்கங்கள்

காதல் சிறப்பிதழ்!

## தீபா ஒரு தீவிரவாதி!






பதவி மாற்றம்!

# டிஷ்யூம்

நீண்ட இடைவேளைக்குப் பிறகு சசியோட டைரக்ஷன்ல வந்திருக்குற படம். இதுக்கு முன்னாடி அவர் எடுத்த 'சொல்லாமலே', 'ரோஜாக் கூட்டம்' மாதிரி 'டிஷ்யூம்'லயும் காதல் தான் கருப்பொருள். ஸ்டண்ட்மேன் ஜீவாவுக்கும் சிற்பக் கல்லூரி மாணவி சந்தியாவுக்கும் உண்டாகற நட்பு, காதலா மாறுதா, இல்லையாங்கறது தான் கதை. படம் முழுக்க உணர்வுகளோட விளையாண்டிருக்காரு சசி. 'ரிஸ்க் பாஸ்கர்' ஜீவா கேரக்டர், துடிக்கத் துடிக்க சண்டைக் கலைஞர்களோட வாழ்க்கைய நமக்குச் சொல்லுது. ஜீவாவும் அதை உணர்ந்து சிறப்பா பண்ணியிருக்காரு. 'ராம்'க்குப் பிறகு இது அவருக்குப் பேர் சொல்ற படம். ஜீவாவுக்குக் கொஞ்சமும் சளைக்கல சந்தியா. ஒவ்வொரு முறையும் அவரைத் தப்பா புரிஞ்சுக்கிட்டு அப்புறம் 'சாரி' கேக்குற அழகுலயும் சரி, அம்மாவோட எண்ணத்துக்கு ஆட்பட்டு காதலை மறைச்சுப் புழுங்கறதுலயும் சரி அப்ளாஸை அள்ளிடறாங்க.

குறிப்பிட்டுச் சொல்ல வேண்டிய இன்னொருத்தர், அமிதாப். பாலிவுட் ஸ்டார் இல்ல. அவரு உயர மனிதன். இவரு குள்ள அமிதாப். படம் முழுக்க ஜீவாவோட நண்பனா வந்து ஜீவனுள்ள நகைச்சுவைக்கு உத்தரவாதம் கொடுத்திருக்காரு. தமிழ் சினிமாவுல இவருக்கு நல்ல எதிர்காலம் இருக்கு. கொஞ்சமே வந்தாலும் தீ விபத்துல இறக்கும்போது நாசர் கண்கலங்க வச்சிடுறார். படத்தோட திருப்பத்துக்குக் காரணமான 'அண்ணி' மாளவிகாவோட நடிப்பு ரொம்பவே பாந்தம்.

விஜய் ஆண்டனி இசை. மூணு பாடல்கள் கேக்க முடியுது. 'நெஞ்சாங்கூட்டில்' மறுபடி மறுபடி மனசுல ரீங்காரமிடுது. அதே மாதிரி ஒளிப்பதிவாளர் ஸெண்டோனியோ டெர்ஸியோவைப் பாராட்டணும். காட்சிகள் கண்ணுக்கு வசீகரம். ஒரு பாட்டுல கார் முழுக்க தாவரத்தைப் படரவிட்டு ஒரு பசுமை காரை உருவாக்கியிருக்கிற ஆர்ட் டைரக்டரோட உத்தி அழகு.

க்ளைமேக்ஸ்தான் கொஞ்சம் ட்ராமாவாயிடுச்சு. வழக்கமான கோமா, உருகல், கண் திறப்புன்னு சசி யோசிச்சிருக்க வேணாம். ஆனாலும் மெல்ல மெல்ல காதலை வளர்த்து, கொஞ்சம் கொஞ்சமா ஆர்வத்தை அதிகப்படுத்தி, சேருவாங்களா, மாட்டாங்களாங்கற துடிப்போட படத்தை முடிச்சிருக்கறது டைரக்ஷனுக்குக் கிடைச்ச வெற்றி. அடுத்த படமும் காதல்தானா சார்?

- லஜ்ஜாவதி



# 'சோ'க்கு தலைவா!




✉ கர்நாடகாவில் நடத்தப்பட்ட அரசியல் நாடகத்தில், பரிமளித்த தேவே கௌடாவின் மதச்சார்பற்ற ஜனதாதள கூட்டணி அதர்மத்தைத் தலையங்கமாக எழுதியதற்கு பிடியுங்கள் பாராட்டை!
**ஈரோடு-1, ரேவதிப்ரியன்**

✉ இன்னும் இருபது வருஷமானாலும் தான் எந்தக் கட்சியும் சாராத பொது ஆள்தான் என விஜய் கூறியிருப்பது வரவேற்கத்தக்கது.
**திருச்சி, ஆர். பிரகாஷ்**

✉ ஜெ... முதல்வராவார் என்கிற 'சோ'வின் திட்டத்துக்கு தராசு அளித்த பதில் 'சோ'க்கு தலைவா!
**அயன்புரம், த.சத்தியநாராயணன்**

✉ மாதவன் ஊற்றிய தோசை ஏலத்தில் விடப்பட்டு, சூட்டோடு சூடாக வசூலிக்கப்பட்ட பணம் பான்யன் சேவை அமைப்புக்கு வழங்கப்படும் என்ற அறிவிப்பைப் படித்தபோது சாப்பிடாமலேயே தோசையின் ருசி அதிகமாகியது.
**ஏற்காடு, ஜெயந்தி சிவக்குமார்**

✉ ஒற்றனின் எம்.எல்.ஏ ஹாஸ்டல் செய்திகள் ரசிக்கும்படி இருந்தன.
**சென்னை-19, தர்மன் பெரியசாமி**

✉ 'சினிமாதான்னு இல்லை, எந்தத் துறையிலும் ஜெயிச்சுக்கிட்டே இருந்தால் தான் மரியாதை' என்று கூறும் சசியின் பேட்டி சம்திங் ஸ்பெஷல்!
**சென்னை - 73, கே.வி.ராமன்**

✉ கலாப்ரியா எழுதிய 'ஓசை' கவிதை அருமை. அனந்தபத்மநாபன் ஓவியம் சிறப்பாக பளிச்சிட்டது!
**வயலூர், பா.சுகுணா**

✉ குளிப்பதற்கு, மினரல் வாட்டரால் குளியல் தொட்டி நிரப்பப்படாததற்காக பிரச்னை செய்கிறார் நடிகை நிலா. படம் பாதியில் நின்றுபோனதற்காகத் தயாரிப்பாளர் வடிக்கும் கண்ணீரில் குளியல் தொட்டி நிறைந்துவிடப் போகிறது. பாவம்!
**கோயம்புத்தூர், டி.ஜெய்சிங்**

✉ 29.1.2006 இதழில் 'விஜயகாந்த் பேசுகிறேன்' என்ற தலைப்பில் நடிகர் விஜயகாந்த், மக்கள் திலகம் தேர்தல் பிரசாரத்திற்குப் பயன்படுத்திய 'பிரசார வேனை' அவருக்கு அன்பளிப்பாக திருமதி ஜானகி எம்.ஜி.ஆர். கொடுத்ததாகவும், 'அவர்

## சிரிக்க... ரசிக்க...!

● பதினைந்து வாரங்கள் படித்து, ரசித்த அமரர் கல்கியின் 'கந்தப்ப பிள்ளை சொன்ன கதை'கள் வாய் விட்டுச் சிரிக்க வைத்தன! ரசிக்க வைத்தன!
**கும்பகோணம், கே.என். பாலகிருஷ்ணன்**

● 'கந்தப்ப பிள்ளை சொன்ன கதை' படிப்பதற்கு மிகவும் ரம்யமாக இருந்தது.

## வட்டமேஜை

உயிரோடு இருந்தவரை அந்த வேன் பற்றி வாய்மூடி இருந்தவர்கள் இப்போது சம்பந்தமில்லாமல் குதிக்கிறாங்க அது ஏன்...' என்றும் கூறியுள்ளார்.

ஜானகி அம்மாள் 1994-ல் வேனை இவரிடம் கொடுத்ததாகக் கூறியவர், அவர் உயிரோடு இருக்கும்போதும், பிறகு 19.05.1996 அன்று அவர் மறைந்த பிறகும் நெடுங்காலம் பயன்படுத்தாமல், 2002-ல் (தன் அரசியல் பிரவேசத்திற்காக) பயன்படுத்தியது ஏன்?

சட்டம், நியாயம், லஞ்ச ஒழிப்பு என்றெல்லாம் கொள்கை முழக்கமிடும் விஜயகாந்த், இன்னொரு கட்சிக்குச் சொந்தமான பொருளைத் தெரிந்தே வைத்திருப்பதும், பயன்படுத்துவதும் நியாயம் என்று நினைக்கிறாரா?

ஜானகி அம்மாள் கொடுத்ததாக விவாதத்திற்கேனும் ஏற்றுக் கொண்டால்கூட சட்டபூர்வமான பெயர் மாற்றம் செய்யாத (அனைத்திந்திய அண்ணா திராவிட முன்னேற்ற கழகத்தின் பெயரிலேயே மேற்படி வேன் இன்றுவரை இருக்கிறது) நிலையில் இவர் அதை வைத்திருப்பதும், பயன்படுத்துவதும் சட்ட விரோதமாகத் தெரியவில்லையா? ஜானகி அம்மாள் இந்த வேனை இவரது அரசியலுக்குப் பயன்படுத்தச் சொன்னாரா?

வேனை அன்பளிப்பாகப் பெற்றதாகக் கூறிவிட்டு காது கேளாதோர் பள்ளிக்கு வருடா வருடம் 50,000 ரூபாய் கொடுத்ததால் பாராட்டப்பட்டதாகவும் இவர் கூறுவதெல்லாம் முரண்பாடாக உள்ளது.

**சென்னை-89,**

**விஜயன்**

**(எ)கே.விஜயகுமார்**



**கோபுலுவின் சித்திரங்கள் அருமை.**

**பெங்களூர்,**

**என்.ஆர்.ராஜா**

● அமரர் கல்கியின் 'கந்தப்ப பிள்ளை சொன்ன கதை'கள் ஒவ்வொரு வாரமும் எங்களை இன்பக் கடலில் மூழ்கடித்தன. கோபுலுவின் சித்திரங்கள் கண்ணுக்கு விருந்து!

**தேனி,**

**கே.ராதிகா**




# கல்கி

**பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட்டிற்காக பரதன் அச்சகத்தில்**
அச்சிட்டு வெளியிடுபவர் :
**கி. ராஜேந்திரன்**

கல்கி பில்டிங்க்ஸ்,
47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 32

ஆசிரியர் :
**சீதா ரவி**

ஆசிரியர் குழு :
**அனுராதா சேகர்**
**ஆர்.சி. ஜெயந்தன்**
**மு.மாறன்**

வடிவமைப்பு :
**எஸ். ஸ்டீஃபன்**
**பி.ஆர். ராஜன்**

தொலைபேசி :
2225 1522, 2225 0623,
2225 1324

தொலைநகல் :
044 - 22251021

மின்னஞ்சல் :
ஆசிரியர் குழு :
kalki@kalkiweekly.com
சந்தா பிரிவு :
subscription@kalkiweekly.com
பிற தகவல்களுக்கு :
info@kalkiweekly.com
கல்கி இன்டர்நெட் முகவரி :
www.kalkionline.com

சந்தா விவரம் :
உள்நாடு :
ஒரு வருடம் : ரூ.440/-
ஆறு மாதம் : ரூ.220/-

வெளிநாடு (விமானத்தபால்) :
ஒரு வருடம் : 65 யு.எஸ். டாலர்

**Bharathan Publications Private Limited,**
Kalki Buildings,
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 032.

**ஒவ்வொரு இதழும் உங்கள் மேஜைக்கு**



'தேர்தலையொட்டி அரசு சலுகைகள் தரலாமா...?' - புரட்சித் தலைவியின்

# "கருணாநிதி ஓய்வெடுத்துக் கொள்ளட்டும்!"

**கீழ்ப் பணியாற்றும் காளிமுத்து தார்மிக அடிப்படைகளைப் 'புரட்சிகரமாகப்' பறக்கவிடுகிறார் இந்தப் பேட்டியில்!**

*(காளிமுத்து, வைகோவுக்கு அழைப்பு விடுமுன் கொடுத்த பேட்டி இது!)*

**ஐந்து வருட சபாநாயகர் அனுபவம் எப்படி?**

"மறக்க முடியாத அனுபவம். மாண்புமிகு புரட்சித் தலைவி அம்மா அவர்கள் எனக்குக் கொடுத்த பெரிய பொறுப்பை முழுமையான மன நிறைவுடன் செய்த திருப்தி இருக்கிறது."

**உங்கள் அரசியல் சிறகுகள் வெட்டப்பட்டு, அமைச்சர் பொறுப்பும் கிடைக்காமல் இருந்தது மன வருத்தமாக இல்லையா?**

"கொஞ்சங்கூட மனவருத்தம் இல்லை. காரணம், கட்சித் தலைமை என்பது ராணுவத் தலைமை போன்றது. நாங்கள் ராணுவ வீரர்கள். தலைமை எனக்குப் பணிமாற்றம் செய்தது. அதைச் சிறப்புடன் செய்து முடித்தேன். இழப்பு என்று ஏதுமில்லை. ஏனென்றால் அமைச்சர் பொறுப்பைவிட பேரவைத் தலைவர் பொறுப்பு பெரிது."

**நீங்கள் திருப்தியாகச் செயல்பட்டதாகச் சொல்கிறீர்கள். ஆனால் எதிர்கட்சிகள் நீங்கள் மிகவும் பாரபட்சமாகச் செயல்பட்டதாகத் தொடர்ந்து சொல்லி வந்தார்களே...?**

"எதிர்த் தரப்பில் - குறிப்பாக பிரதான எதிர்கட்சியான தி.மு.க வினர் சட்டமன்றத்தைச் சரியாகப் பயன்படுத்திக் கொள்ளாமல், வீண் விவாதம், வெட்டிப் பேச்சு என்று வீணடித்து வம்பு வளர்த்தார்கள். அவர்களுடைய தலைவர் அவைக்கே வராத நிலையில், பேராசிரியரும் இல்லாத நிலையில் ஆற்காடு வீராசாமியாலும் துரைமுருகனாலும், தி.மு.க உறுப்பினர்களைக் கட்டுப்படுத்த முடியவில்லை. சட்டசபையில் கட்சிகளின் எண்ணிக்கைக்கு ஏற்ப நேரம் ஒதுக்கப்படுகிறது. இப்படிப் பார்த்தால் பெரும்பாலான நேரம் ஆளும் கட்சிக்குத்தான் ஒதுக்கப்படவேண்டும். ஆனால் அவர்களின் நேரத்தையும் நான் எதிர் கட்சிகளுக்கு ஒதுக்கினேன். ஆனால் அவர்கள் கிடைத்த நேரத்தில் விதண்டா வாதம் செய்தார்களே தவிர ஜனநாயகக்

கடமையை ஆற்றவில்லை. குறிப்பாகக் கேள்வி நேரத்தில் முதல்வர் மற்றும் அமைச்சர்களிடம் தொகுதி உட்பட எந்தப் பிரச்னையைப் பற்றியும் கேள்வியும், துணைக் கேள்வியும் போடலாம். இருந்தும் அந்த நேரத்தை தி.மு.க உறுப்பினர்கள் முறையாகப் பயன்படுத்திக் கொள்ளவில்லை."

**சட்டசபைக் குறிப்புகளில் இடம் பெறாவிட்டாலும், எதிர்கட்சிகளின் ஏச்சு, பேச்சுக்கள் உங்களைப் புண் படுத்தியிருக்குமே!**

"அது போன்ற செயல்களில் பொன் முடி, பரிதி இளம்வழுதி போன்றோர் ஈடுபட்டார்கள். முன் வரிசையில் இருந்த எதிர்கட்சித் தலைவர்களால் எனக்கு எந்த பிரச்னையும் இல்லை. குறிப்பாக துரை முருகன் இந்தி எதிர்ப்பு போராட்டம் காலம் தொட்டு என் நண்பர். ஆனால் தி.மு.க. உறுப்பினர்கள் சிலர் துரை முருகன் சொன்னாலும் அவரை மீறி அவையில் ரகளையில் ஈடுபட்டார்கள். ஆனால் தி.மு.க. உறுப்பினர்களின் செயல் பாடுகளை என்னால் புரிந்துகொள்ள முடியும். ஏனென்றால் நானும் ஒரு காலத்தில் எதிர்கட்சி வரிசையில் இருந்தி ருக்கிறேனே!"

**கேபிள் தொலைக்காட்சி கையகப் படுத்தும் விவகாரத்தில், தி.மு.கவின ருக்குப் பேச வாய்ப்பே கொடுக்காமல், கலைஞர் மீது உரிமைப் பிரச்னையை, உரிமைக் குழுவுக்கு அனுப்பியது சரி யான அணுகுமுறைதானா?**

"ஃபார்வர்டு பிளாக் உறுப்பினர் சந்தானம் உரிமைப் பிரச்னை கொண்டு வந்த பின்னர் அதன் மீது சபாநாயகர் முடிவு எடுத்தபின் யாரும் பேச முடியாது. தி.மு.கவினருக்கு விதிகளின் அடிப் படையில்தான் வாய்ப்புக் கொடுக்கப் படவில்லை. ஆனால் அதே சமயம் சம் பந்தப்பட்ட உறுப்பினர் - அதாவது கருணாநிதி- அவையில் இருந்திருந்தால் அவருக்கு நிச்சயம் பதில் சொல்ல





வாய்ப்புக் கிடைத்திருக்கும். கருணாநிதி அவர்கள் கவர்னருடன் என்ன பேசினார்

## -காளிமுத்து தடாலடி

என்பது தி.மு.க. உறுப்பினர்களுக்குத் தெரிய வாய்ப்பில்லாத நிலையில் அவர்கள் பேசுவதில் எந்தப் பயனும் இருக்காது. எனவே வாய்ப்புக் கொடுக்கப்பட வில்லை."

**சட்டசபை அனுபவத்தில் நெகிழ வைக்கும் சம்பவம்?**

"திருக்குறளை தேசிய நூலாக்க வேண்டும் என்ற தீர்மானம் வந்தபோது பேராசிரியர் அவர்கள் திருத்தம் கொண்டு வந்தார்கள். அதை முதல்வர் முழுமனத் துடன் ஏற்றுக்கொள்ள, தீர்மானம் நிறை வேறியது. சட்டமன்ற அனுபவத்தில் அந்த நாள் நினைவில் நிற்கும் நாள். மற்ற படி சபாநாயகராக இருந்தபடியால் நிறைய நேரம் கிடைத்தது. நான் நேசிப்

பதும் சுவாசிப்பதும் புத்தகங்களே. நிறைய படிக்க முடிந்தது. இலக்கிய கூட்டங்களுக்குப் போக முடிந்தது."

**இப்போது உங்களை முதல்வர் சபாநாயகர் பதவியிலிருந்து விடுவித்து கட்சிப் பொறுப்புக்கு நியமிக்கக் காரணம், அ.தி.மு.க.வுக்குப் பிரசார பலம், திறமையான பேச்சாளர்கள் இல்லை என்பதுதானே!**

"உங்கள் யூகம் தவறு. அ.இ.அ.தி.மு.கவில் கலைத் துறையினர் உட்பட சிறந்த பேச்சாளர்கள் நிறைய உள்ளனர். யாருடைய சேவையை எப்போது பயன்படுத்திக்கொள்ள வேண்டும் என்று தலைமைக்குத் தெரியும்."

**பலம் வாய்ந்த தி.மு.க. கூட்டணிக்கு முன்னால் உங்கள் கட்சி பலவீனமானதாகத்தானே உள்ளது!**

"பயங்கர நிதி நெருக்கடியில் அரசு கஜானாவை வைத்துவிட்டுப் போனது தி.மு.க. ஆனால் அந்த நிலையிலிருந்து கொஞ்சம், கொஞ்சமாக முன்னேறி இப்போது நிதி நிலை மிகவும் சிறப்பாக இருக்கிறது. வறட்சி, சுனாமி, புயல், மழை என்று இயற்கை இடர்பாடுகளை எதிர்கொண்டது மட்டுமல்லாமல், மக்களின் அனைத்துத் தரப்பினரும் மகிழத்தக்க அளவுக்குச் சாதனை புரிந்துள்ளது தமிழக அரசு. மத்திய அரசுக்கு மாநிலத்திலிருந்து வருமானத்தை அள்ளிக் கொடுத்தாலும், அவர்கள் நமக்குக் கிள்ளித்தான் கொடுக்கிறார்கள். இது தவிர மத்திய தி.மு.க அமைச்சர்கள் போடும் முட்டுக் கட்டைகள். இவற்றையெல்லாம் தாண்டி சாதனைகள் படைத்திருக்கிறோம். எனவே இந்தச் சாதனைகளின் அடிப்படையில் மக்கள் மீண்டும் எங்களைத் தேர்ந்தெடுப்பார்கள். பலமாக இருக்கிறோம்; தன்னம்பிக்கையோடு, தைரியமாகத் தேர்தலை எதிர்கொள்கிறோம்."

**அப்படியென்றால் எதிர் முகாம் பற்றிய உங்கள் பார்வைதான் என்ன?**

"அடிப்படையில் ஒன்றைப் புரிந்து கொள்ளுங்கள். தி.மு.க. மக்களால் புறக்கணிக்கப்பட்ட கட்சி. மிகவும் பலவீனமான கட்சி. அதனுடன் கூட்டணி அமைத்துள்ள கட்சிகளுக்குப் பல நோக்கங்கள். எனவே பத்திரிகைகள் வர்ணிப்பது போல இது வலுவான கூட்டணியே அல்ல! கலைஞரின் ஆசை நிறைவேறாது. அவர் நிறைந்த ஓய்வு எடுத்து இலக்கியப் பணியில் இறங்கட்டும்."

**தேர்தல் நெருங்கும் சமயத்தில் சலுகைகளை அள்ளி விடுவது என்ன நியாயம்?**

"ஜனநாயகத்தில் தேர்தல் ஓர் அளவுகோல். மக்கள் தொண்டாற்ற ஓர் அங்கீகாரம். தேர்தலில் வென்று பதவிக்கு வந்தால்தான் மக்களுக்கு ஏதாவது செய்ய முடியும். எனவே தேர்தலையொட்டிச் சலுகைகள் அளிக்கக்கூடாது என்று சொல்வது தவறு. இந்தச் சலுகைகள் எங்களுக்கு வெற்றியைத் தேடிக் கொடுக்கும் என்றாலும், அதையே நோக்கமாகக் கொண்டு செய்யவில்லை. எங்களை



**"தேர்தலையொட்டிச் சலுகைகள் அளிக்கக்கூடாது என்று சொல்வது தவறு!"**

மக்கள் ஐந்தாண்டு காலத்துக்குத் தேர்ந்தெடுத்திருக்கிறார்கள். அந்தக் கால கட்டத்துக்குள் மக்களுக்கு ஆற்ற வேண்டிய கடமைகளைச் செய்கிறோம். உதாரணமாக சாலைப் பணியாளர்களை எடுத்துக் கொள்வோம். சாலை மேம்பாட்டுக்கே பணம் இல்லாதபோது, சாலைப் பணியாளர்களுக்கு எப்படி சம்பளம் வழங்க முடியும்? அதனால்தான் அவர்கள் நீக்கப்பட்டார்கள். இப்போது நிதி நெருக்கடி தீர்ந்து விட்டது. சாலை மேம்பாட்டுக்கும், சாலைப் பணியாளர்களுக்கும் ஒதுக்க நிதி உள்ளது. எனவே தான் அவர்களை மீண்டும் பணியில் சேர்த்துக் கொள்ள முதல்வர் முடிவு செய்தார். எனவே எங்கள் செயல்பாடுகளை எதிர்கட்சிகள் விமர்சிக்கக் காரணம், 'தேர்தலில் அடி வாங்கி விடுவோமோ' என்ற பயம்தான். இதுதவிர அ.இ.அ.தி.மு.க தேர்தலுக்குத் தேர்தல் உலா வரும் கட்சியல்ல; மக்களின் வாழ்வோடு அன்றாடம் இணைந்து செயல்படும் கட்சி."

**கூட்டணிக்கான பேச்சு வார்த்தைகள் நடக்கின்றன என்று சொல்லுகிறார் முதல்வர். பா.ஜ.க. மற்றும் விஜயகாந்துடன் கூட்டணி இருக்குமா? தி.மு.க அணியிலிருந்து யாரேனும் வந்து சேர்வார்களா?**

"தமிழகத்தைப் பொறுத்தவரை கூட்டணி அமைத்துப் போட்டியிடுவது என்பது தொடர்கதையாகிவிட்டது. தனித்து நின்றே வெற்றி பெறுவோம் என்று தன்னம்பிக்கை இருந்தாலும், விருப்பத்தோடு வரும் கட்சிகளுடன் கூட்டணி வைத்துக் கொள்வதை புரட்சித் தலைவி முடிவு செய்வார்."

**நீங்கள் எந்தத் தொகுதியில் நிற்கப் போகிறீர்கள்?**

"சோழவந்தான் தொகுதியில் நான் நிற்க வேண்டும் என்று அந்தத் தொகுதியின் தொண்டர்கள் கேட்டுக் கொண்டுள்ளனர். புரட்சித் தலைவி முடிவு செய்வார்."

**- ப்ரியன்**

சிம்புவுடனான காதல் கிசுகிசுவில் வசமாகச் சிக்கியுள்ளார் நயன்தாரா. காதல் ஸ்பெஷலுக்காக அணுகிய போது 'நோ காண்ட்ரவர்ஸி ப்ளீஸ்' என்றாலும் காதல் பற்றித்தான் காதலாகப் பேசினார்.

காதல்?

"ஊருக்கு ஒரு அர்த்தம். என்னைக் கேட்டா அத்தனை உணர்ச்சிகளையும் உள்ளடக்கியதுதான் காதல்னு சொல்வேன். காதல், கல்யாணத்துல தோற்குதுன்னு சொல்றவங்க எல்லாம் உளர்றாங்க. காதலோட அழகே அதோட வெற்றிதான்."

சொந்த அனுபவமா?

"ஓ நோ! கண்ணால் பார்த்ததை, காதால் கேட்டதை வைச்சு சொல்றேன்."

# சிம்புவுடன்



**ரசிகர்கள், ஹீரோக்கள் இரு தரப்பும் ஐ லவ் யூ சொன்னால்..?**

"ரசிகர்களோட ஐ லவ் யூவின் அர்த்தம், ஐ லைக் யூ என்பதுதான். அதுக்குத்தானே இவ்வளவு கஷ்டப்படறோம். ஹீரோக்கள் சொன்னா... சொன்னா பார்ப்போம்... யார் சொல்றா? எதுக்குச் சொல்றாங்க? எந்த



# ாதலா?

இடத்துல சொல்றாங்க? அப்போ நான் என்ன மனநிலையில இருக்கறேன்... எல்லாம் பொருத்திப் பார்த்துத்தான் பதில் சொல்ல முடியும். ஆனாலும் இதுவரைக்கும் எந்த ஹீரோவும் என்கிட்ட லவ் ப்ரபோஸ் பண்ணினது கிடையாது."

**சிம்புவுடனான காதல் கிசுகிசு?**

"சில சமயம் கோபம்தான் வருது. இருந்தாலும் கிசுகிசுவுல மாட்டாத நடிகைகள் உண்டா? நானும் ஒரு காலத்துல கிசுகிசு செய்திகளை விழுந்து விழுந்து படிச்சவதான்."

**காதல் திருமணம்?**

"கடவுள்தான் அறிவார்."

**ஆட்டோகிராப்...**

"உண்டு. ஐந்தாவது படிக்கும்போது என் க்ளாஸ்மேட், பஞ்சாபி பையன், கோழி கிறுக்கலான கையெழுத்துல 'ஐ லவ் யூ'ன்னு எழுதிக் கொடுத்தான். அவன் தலையில 'நங்'குன்னு கொட்டிட்டு ஓடிப் போயிட்டேன். பாவம் பையன்."

- எழில்

க்ளாசிகல் டான்ஸர்.

"இப்ப என்னையே எடுத்துக்கோங்க... என் குரு உஷா சீனிவாசன்கிட்ட இருபது வருஷமா முறையா பரதம் கத்துக்கிட்டேன். அதன் காரணமா உடல் நான் சொன்னபடியெல்லாம் வளைஞ்சது. ஊளைச்சதை போடல. பார்வையாளர்களுக்கு மத்தியில ப்ரோக்ராம் பண்றதால பயம் போய் தைரியமும் தன்னம்பிக்கையும் கிடைக்குது. இந்த மூணும் இருக்கும்போது தெளிவான மொழியும் தானாகவே வந்துடுது. நான் ஒரு வெற்றிகரமான மார்க்கெட்டிங் ஆளா மார்றதுக்கு வேற என்ன வேணும்?" என்று தன்னையே உதாரணப்படுத்திப் பேசும் தீபா, விப்ரோ கம்ப்யூட்டர்களை இந்தியன் ஓவர்சீஸ் வங்கியிடம் ஒரு கோடி ரூபாய்க்கு விற்றதன் மூலம் 'பெஸ்ட் சேல்ஸ் பர்சனாலிட்டி' விருதை

# தீபா ஒரு தீவிரவாதி!

"ஒரு வெற்றிகரமான மார்க்கெட்டிங் பர்சனுக்குக் கண்டிப்பா சில தகுதிகள் வேணும். தெளிவான பேச்சு, நல்ல உடல் மொழி, தைரியமான அணுகுமுறை, எல்லாத்துக்கும் மேல தன்னம்பிக்கை. இந்தத் தகுதிகளை வளர்த்துக்க எம்.பி.ஏ. படிக்க வேண்டாம். பரதம் கத்துக்கிட்டாலே போதும்" என்று கூறும் தீபா மகாதேவன் ஒரு

அள்ளியிருக்கிறார்.

ஒரு பக்கம் நடனம், மறுபக்கம் மார்க்கெட்டிங் என்று அசத்தும் தீபா, இப்போது கலிஃபோர்னியாவாசி. அங்கே திருச்சிற்றம்பலம் என்ற பெயரில் நடனப் பள்ளியைத் தொடங்கி இருக்கிறார். "பரத நாட்டியம் கத்துக்கணும்ங்கிற ஆர்வத்தோட இந்தியக் குழந்தைகள் இருபது பேர் என்னோட பள்ளியில் உடனே வந்து சேர்ந்தாங்க. ஆனால் ஒரு அமெரிக்கக் குழந்தையைக் கூட அவங்க பெற்றோர் கூட்டி வரலை. இதை ரொம்ப வருத்

த்தோடு சொல்றேன். நம்ம குழந்தைகள் பரதத்தோடு அவர்களுடைய வெஸ்டர்ன், பாலே நடனங்களைக் கத்துக்கிறாங்க. ஆனால் அவர்கள் பரதத்தை ஆர்வத்தோடு பார்க்கிறதில்லே. இதை மாத்தணும். அவர்களுக்கு இலவசமா சொல்லிக் கொடுத்தாலும் சரி... வெஸ்டர்ன் டான்ஸ் பரவின மாதிரி வெள்ளைக்காரங்க மத்தியிலே பரதம் பரவணும். அதுமட்டுமில்லாமல் ஆப்கானிஸ்தான் மாதிரி பெண்கள் அடக்கி ஒடுக்கப்படுற நாட்டுலே, தங்க விசா கிடைச்சா விடமாட்டேன். அங்கே போய் இஸ்லாமியப் பெண்களுக்குப் பரதம் கத்துக் கொடுப்பேன். இது ஏதோ விளையாட்டா பேசுற விஷயமில்லே. அனுமதி கிடைச்சிட்ட அடுத்த நிமிஷமே ஃப்ளைட்டைப் பிடிச்சுடுவேன்" என்று ஒரு தீவிரவாதியைப் போல முனைப்புக் காட்டும் தீபா, சமீபத்தில் சென்னை வந்து பரதக் கலை உலகில் ஒரு சலசலப்பை உண்டு பண்ணியிருக்கிறார். என்ன அது?

இளைய தலைமுறை கலைஞர்கள் இது வரை எட்டு அக்ஷரங்களை (ஆதிதாளம்) மட்டுமே கொண்டு நடனமாடியிருக்கிறார்கள். ஆனால் தீபா பதினொன்கு அக்ஷரங்களை அடிப்படையாகக் கொண்ட 'கண்ட ஜாதி அடதாளத்தை' மட்டும் எடுத்துக் கொண்டு 'அகண்ட மார்க்கம்' என்ற தலைப்பில் நாட்டிய நிகழ்ச்சியை வழங்கி சென்னை நடன ரசிகர்களை அசத்தியிருக்கிறார். அலாரிப்பு முதல் தில்லானா வரை கண்ட ஜாதி அடதாளத்தை மட்டுமே வைத்து நிகழ்ச்சியைத் தயாரித்து வைத்துக் கொண்டு, தகுதியான கலைஞருக்காகக் காத்திருந்திருக்கிறார் மதுரையைச் சேர்ந்த பரதநாட்டிய குருவான முரளிதரன். தீபா மகாதேவன் கிடைத்ததும், ஆராய்ச்சியை சென்னை பாரதிய வித்யாபவனில் அரங்கேற்றியிருக்கிறார்கள். இது, நடனக் கலைஞருக்கும் பக்கவாத்தியக் கலைஞர்களுக்கும் மட்டுமில்லாமல், பார்வையாளர்களுக்கும் புதிய அனுபவமாகத் திகழ்ந்துள்ளது.

"பரதக் கலையின் பாரம்பரியம் கெட்டு விடாமல், இதுபோன்ற புதுமைகளைச் செய்தால், வெஸ்டர்ன் டான்ஸையும், அதன் தழுவலாக இருக்கும் சினிமா டான்ஸையும் ரசிக்கும் இளைய தலைமுறை பரதத்தையும் ரசிக்கும்" என்கிறார் தீபா.

**- கலைஞன்**

அட்டை மற்றும் படம் : **புதூர் சரவணன்**




# காதலில் பொய்!

'பொய் சொல்லாமல் காதலிக்க முடியுமா?' இப்படியொரு ரசமான கேள்வியை தராசுவின் தட்டில் வைத்தார், வேலூர் வாசகர் முத்துஆனந்த். தராசார் வசமிருந்து கேள்வியைச் சுமந்து வந்த அஞ்சலட்டையை பூ மாதிரி கைகளில் வாங்கி பதில் சொன்ன இருவர் கிருஷ்ணமூர்த்தி - மஞ்சு. இவர்களின் ஸ்பெஷல் தகுதி, உருகி உருகிக் காதலில் கரைந்து சமீபத்தில் மணம் முடித்த கல்யாண ஜோடி.

**கிருஷ்ணமூர்த்தி :** பிரபல விளம்பர நிறுவனத்தில் மார்க்கெட்டிங் எக்ஸிகியூட்டிவா வேலை செஞ்சுக்கிட்டு இருந்தேன். என்னோட ஆபீஸ் ஆழ்வார்பேட்டை. மஞ்சு ஆபீஸ் அடையாறு. ஒரு நாள் ஈவினிங் ஆபீஸ் முடியற நேரம் என்னோட



பாஸ் கூப்பிட்டார். 'ஏழு மணிக்கு ஒரு புது க்ளையண்ட் வராங்க. நான் இன்னொரு க்ளையண்டை பார்க்கப் போறேன். நீ புதுசா வர்ற க்ளையண்டை ரிசீவ் பண்ணிப் பேசிட்டு இரு. அரை மணி நேரத்துல வந்துடுறேன்'னார். எனக்கு பக்குன்னு ஆயிடுச்சி. 'இல்ல சார், ஏழு மணிக்கு நான் செக் வாங்கப் போகணும். ரெடியா இருக்கு. வேணும்னா ஏழு மணிக்கு ஷார்ப்பா இங்கே இருக்கேன்'னு அவர்கிட்ட பொய் சொல்லிட்டு, எழுபது கிலோமீட்டர் வேகத்துல பைக்கை முடுக்கினேன். இருபது நிமிஷத்துல மஞ்சுவைப் பார்த்து, அவங்களை பஸ் ஸ்டாப்ல டிராப் பண்ணிட்டு திரும்ப ஆபீஸ் வந்துடணும்ங்கறது பிளான். ஆனால் வழியிலேயே ஆக்ஸிடெண்ட். வலது காலில் மூணு விரல்களில் முறிவு ஏற்பட்டது கூட தெரியாமல் நினைச்சதை முடிச்சிட்டு வலியோட பத்து நிமிஷம் லேட்டா வந்தேன். பாஸ் 'செக் வாங்கியாச்சா?'ன்னு கேட்டார். ஆமா, இல்லைன்னு மாறிமாறி தலையாட்டினேன். 'நீங்க வாங்கப்போன செக் இதுவா பாருங்க'ன்னு ஒரு செக்கை நீட்டினார். எனக்கு பகீர்னு ஆயிருச்சு. 'காதல் எவ்வளவு பொய் சொல்ல வைக்குது பார்'னு அவர் சொன்னதும் எனக்கு அடுத்த பகீர். காதலிக்கும்போது பொய் சொல்றது, மத்தவங்களைப் பாதிக்கிற மாதிரி இருந்திடக் கூடாதுன்னு புரிஞ்சுக்கிட்டேன்.

**மஞ்சு :** ஆபீஸ் முடிஞ்சதும் ஏழு மணிக்கெல்லாம் வீட்டுக்கு வந்துடுவேன். காதலிக்க ஆரம்பிச்ச பிறகு வீட்டுக்குப் போகாமல் மூர்த்தி கூடவே அதிக நேரம் இருக்கணும்னு மனசு துடிக்கும். நான் ஒன்பது மணிக்கு லேட்டா வீட்டுக்கு வர்றதைப் பார்த்துட்டு அண்ணன் கேட்க ஆரம்பிச்சார். ஓவர்-டைம்னு சொல்லிச் சமாளிச்சேன். ஆனால் பே ஸ்லிப் காட்டிக் கொடுத்துடும்னு எனக்குத் தெரியல... ரொம்ப அப்பாவியா மாட்டிக்கிட்டேன்.

தொகுப்பு : **ஜெய்**

படம் : **புதூர் சரவணன்**

# கிறுகிறுக்க வைக்கும் வளர்ச்சி!

மும்பை பங்குச் சந்தை குறியீட்டு எண் பத்தாயிரம் புள்ளிகளைக் கடந்துவிட்ட சாதனையை தேசமே கொண்டாடி மகிழ்கிறது. உலகில் ஏழு பங்குச் சந்தைகள் மட்டுமே இதுவரை பத்தாயிரம் புள்ளிகளைக் கடந்துள்ளன.

இந்த அமோக வளர்ச்சிக்குக் காரணம் 1) அன்னிய முதலீடில் அபரிமித பெருக்கம் 2) பொருளாதார வளர்ச்சிக்கு உகந்த அரசு கொள்கை என்று சொல்லப்படுகிறது.

நிதி அமைச்சர் ப.சிதம்பரம் இந்தத் திடீர் வளர்ச்சியை மெச்சிக் கொள்வதுடன் இந்த நிதி ஆண்டுக்கான மொத்த உள்நாட்டு உற்பத்தி 8.1 சதவிகித வளர்ச்சி காணும் என்றும் எதிர்பார்ப்பு தெரிவித்துள்ளார். (கடந்த ஆண்டின் மொத்த உற்பத்தி வளர்ச்சி விகிதம் 7.5 சதவிகிதம்) பங்குச் சந்தை வளர்ச்சி பிளஸ் மொத்த உற்பத்தியில் பெருக்கம் என்கிற இரட்டை ஆதாயம், "கிறுகிறுக்க வைக்கும் கலவையாக அமையும்" என்றும் நிதியமைச்சர் கூறியிருக்கிறார்.

எந்த வளர்ச்சியும் படிப்படியாக நடைபெறும்போதுதான் நிலைக்கும்; நீடிக்கும். 'கிறுகிறுக்க வைக்கும்' வேகத்திலோ அளவிலோ நிகழ்கின்ற வளர்ச்சி, அதே வேகத்தில் சரிந்து விடும் வாய்ப்பும் உண்டு. அதிலும் பங்குச் சந்தையின் சரிவு என்பது முதலீட்டாளர்களை மட்டுமின்றி, நேரடி சம்பந்தப்படாத சராசரி



# கல்கி




2006 பிப்ரவரி 19
பார்த்திப மாசி 7
மலர் : 64
இதழ் : 29


தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.




மக்களையும் மறைமுகமாகப் பெரிதும் பாதிக்கும்.

இவ்வாறிருக்க, நிதியமைச்சரும் அவரது இலாகா அதிகாரிகளும் நின்று யோசிப்பது அவசியமாகிறது.

மும்பை பங்குச் சந்தையில் பல நிறுவனங்கள் பதிவாகியுள்ள போதிலும், சுமார் முப்பது முன்னணி நிறுவனங்கள்தான் குறியீட்டு எண் உயர்வுக்குக் காரணமாகின்றன. அதேபோல், தேசிய பங்குச் சந்தையின் ஐம்பது நிறுவனங்கள். இந்த எண்பது நிறுவனங்களின் அமோக வளர்ச்சி மட்டுமே இந்தியாவின் வளர்ச்சியாகிவிடுமா?

இந்தச் சந்தைகளில் நிறைய அன்னிய முதலீட்டாளர்கள் தற்போது முதலீடு செய்துள்ளார்கள். அவர்கள் தங்கள் முதலீடுகளைத் திரும்பப் பெறாதவரை சரி; ஆனால் ஏதோவொரு காரணத்துக்காக அவர்கள் முதலீடுகளைத் திரும்பப் பெற நினைத்து, பங்குகளை விற்பனைக்குக் கொண்டுவந்தால் நிலவரம் கலவரம்தானே?

உள்நாட்டு முதலீட்டாளர்கள் இன்னும் பங்குச் சந்தையில் நேரடி முதலீடு செய்கிற அளவுக்குத் துணிவு பெறவில்லை என்பதும் தெளிவாகத் தெரிகிறது. ஹர்ஷத் மேத்தா ஊழல் வெடித்து, பல சிறு முதலீட்டாளர்களை நஷ்டமடையச் செய்தது. அந்த அனுபவத்தின் ரணம் இன்னும் ஆறாததால் தனி நபர் முதலீட்டாளர்கள், சிறு முதலீட்டாளர்கள் பங்குச் சந்தைகளில் நம்பி முதலீடு செய்வதில்லை.

அப்படியானால், பத்தாயிரம் புள்ளிகளைக் கடந்த சாதனையின் பயனை யார் அனுபவிப்பார்கள்...? நிச்சயமாக உள்நாட்டின் மத்திய தர வர்க்க சிறு முதலீட்டாளர்கள் அல்ல; பங்குச் சந்தையில் விளையாடும் பெரும்புள்ளிகளும் என்.ஆர்.ஐ. முதலீட்டாளர்களும்தான் அள்ளிக் கொள்வார்கள்.

இது ஒருபுறம் என்றால், நிதி அமைச்சர் குறிப்பிடும் பொருளாதார பெருக்கத்தின் பயனையும் ஏற்கெனவே வசதி படைத்த, வளர்ச்சியுற்ற பிரிவினர்தான் அனுபவிக்கிறார்கள்.

ஐ.டி. துறையிலும், மேல்நாட்டு வங்கிகள், இன்ஷூரன்ஸ் போன்ற அமைப்பு பலம் உள்ள




நிறுவனங்களிலும் உள்ள ஊழியர்கள் இருபத்தைந்து வயதில் முதல் வீடு வாங்குகிறார்கள். முப்பதாவது வயதில் அந்தக் கடனை அடைத்துவிட்டு இரண்டாவது வீடு வாங்கத் தயாராகி விடுகிறார்கள்!

ஆனால், இந்தியாவின் பல பகுதிகளில் விவசாயிகள் பிழைக்க வழியின்றித் தற்கொலைக்குத் தூண்டப்படுகிறார்கள்; சாலைப் பணியாளர்கள் அரசின் அனல் - புனல் கொள்கைகளினால் அலைக்கழிக்கப்பட்டு அல்லலுறுகிறார்கள்; லட்சோப லட்சம் ஏழை மக்களுக்கு 'வேலை வாய்ப்பு உத்தரவாத திட்டம்' என்ற போர்வையில் அற்பத் தொகைகளை அரசு வினியோகித்துக் கொண்டிருக்கிறது. ஒட்டுமொத்தமாக இதற்காக, கோடிக்கணக்கில் வரிப்பணம் உற்பத்திக்கு உதவாத வகையில் செலவாகிறது.

இந்தியாவின் பொருளாதார வளர்ச்சி, தொழில் வளர்ச்சி, இரண்டுமே உலகம் வியக்கும் வகையில் அமைந்திருந்தாலும் நமது நாட்டின் ஏழைமைக்குத் தீர்வு சொல்லும் திசையில் அது இன்னும் திரும்பவில்லை.

கனிமவளத் துறை, மின் உற்பத்தித் துறை போன்றவற்றில் எதிர்பார்த்த அளவு வளர்ச்சி இல்லை என்று மத்திய புள்ளிவிவரவியல் துறையே தனது ஆய்வறிக்கையில் வெளியிட்டுள்ளது. பருவமழை பொய்க்காததால் விவசாய உற்பத்தி இவ்வாண்டு தப்பிப் பிழைத்தது.

படித்தவர்களுக்கு வேலை வாய்ப்பு வழங்கும் துறைகள் தாமாகப் பெருகும். படிக்காத, பின்தங்கிய, அமைப்பு சாராத, ஸென்ஸெக்ஸ் குறியீடு என்றால் என்னவென்றே அறியாத கிராமப்புறங்களில் உள்ள இந்திய சகோதர சகோதரிகளை அரசும் நிதியமைச்சகமும் மறந்துவிடலாகாது.

இந்தப் பிரிவினரின் நிலையான வருமானத்துக்கு வேலை வாய்ப்புகள் பெருகினாலே யொழிய இந்திய பொருளாதாரம் வளர்ச்சியடைந்திருப்பதாகச் சொல்ல முடியாது; வீக்கமடைந்திருப்பதாக வேண்டுமானால் கொள்ளலாம். ●



'**எ**ங்கள் எம்.எஸ்' நிறைந்தது என்பதைப் படிக்கவே பிடிக்கவில்லை. வாரந்தோறும் எம்.எஸ்ஸை பிரபலங்கள் எங்கள் கண்முன் நிறுத்திய விதம், இதம். மகாத்மா மறைந்த செய்தி கேட்ட ஐன்ஸ்டீன், 'இனி வரும் தலைமுறை, இந்த மாதிரி ஒரு நல்ல மனிதர் நிஜமாகவே இருந்தார் என்று நம்புவதற்கு கஷ்டப்படுவர்' என்றார். மகாத்மாவைப் பற்றின ஐன்ஸ்டீனின் இந்தக் கணிப்பு எம்.எஸ்.ஸுக்கும் பொருந்தும்.

**- கே. சுப்ரமணியம், மும்பை**

'**எ**ங்கள் எம்.எஸ்' என்ற தலைப்பில் இசைப் பேரரசி அவர்களுடனான தங்கள் அனுபவங்களை, அவர்தம் மகத்துவங்களை வாரம் ஒரு பிரபலம் விவரித்த பகுதி படிக்கப் படிக்க இனிய பரவசம் அளித்தது! மறக்க முடியாதவர் எங்கள் எம்.எஸ். மட்டுமல்ல... இந்தக் கட்டுரைத் தொடரும் கூடத்தான்!

**- த. சத்தியநாராயணன், அயன்புரம்**

**க**ர்நாடக இசை என்றதுமே நம் எல்லோரின் நினைவுக்கு வருபவர் இசைப் பேரரசி எம்.எஸ். அவர்கள்தாம்! அவர்களுடன் நெருங்கிப் பழகியவர்கள் தமது ஆத்மார்த்த அனுபவங்களை வாசகர்களோடு பகிர்ந்து கொண்டது மனநிறைவையும் மகிழ்ச்சியையும் அளித்தன!

**- கே.என்.பாலகிருஷ்ணன் கும்பகோணம்**

'**எ**ங்கள் எம்.எஸ்.' நிறைந்தது, இனிய சங்கீத விருந்து திடீரென்று முடிவுற்றாற் போல் வருத்தம் அடைய வைக்கிறது. 'கல்கி' தவிர வேறு எந்தப் பத்திரிகை இந்த விருந்தைத் தர முடியும்?

**- வேலவன், மயிலாடுதுறை**

**ச**தாசிவம் அவர்கள் மறைந்து ஒரு வருடம் கழித்து நடந்த சம்பவம் இது. என் மகனுக்குத் திருமணம் நிச்சயமானது. எம்.எஸ். அவர்களை வீடு தேடிச் சென்று தயக்கத்துடனேயே அழைத்தோம். அப்போதே என் மகனை ஆசீர்வதித்து 'நான் இங்கிருந்தே மணமக்களை வாழ்த்துவேன்' என்று, தான் வர இயலாததை நாசூக்காகச் சொன்னார். அம்மா வராத குறையிருந்தாலும் திருமணம் விமரிசையாக நடந்தது. மறுநாள் வீட்டுக்குத் திடீரென்று போன், அம்மா வரப்போவதாக. எல்லோருக்கும் மகிழ்ச்சி. வந்து ஒரு மணி நேரம் இருந்ததோடு மட்டுமல்லாமல், மணமக்களை ஆசீர்வதித்து அளவளாவி அனைவரையும் சந்தோஷத்தில் ஆழ்த்திவிட்டுச் சென்றார். அம்மா அம்மாதான்!

எங்கள்

**- வி.கோபாலன், சென்னை - 20**

**எம்**.எஸ். அவர்களின் குடும்பமும் வத்தலக்குண்டில் இருந்த என் தாத்தா குடும்பமும் அந்தக் காலத்தில் நெருங்கிய நண்பர்கள். எம்.எஸ். அவர்கள் மதுரையில் கட்டிய வீட்டின் கிரகப்பிரவேச அழைப்பிதழை இன்றைக்கும் பொக்கிஷமாக வைத்துப் பாதுகாத்து வருகிறேன். என் பேத்தி ஜெயஸ்ரீயை ஆசி பெறுவதற்காக அவரிடம் அழைத்துச் சென்றபோது அந்த அழைப்பிதழைக் காண்பித்தோம். அப்போது அவர் கண்கலங்கி பழைய நினைவுகளில் மூழ்கியதை என்றுமே மறக்க முடியாது.

**- ஜெயாராஜாமணி, மதுரை**

**எ**னது ஆசார்யரான ஸ்ரீமத் திருக்குடந்தை ஆண்டவன் சுவாமிகளைக் காண திருமதி எம்.எஸ், சதாசிவம் இருவரும் பலமுறை வந்துள்ளனர். ஒருமுறை



# எம்.எஸ்!

பெங்களூரில் டி.வி.எஸ். அதிபர் திரு.டி.எஸ். ராஜம் அவர்களுடன் வந்து ஆண்டவன் சுவாமி களைத் தரிசித்து, தமது அன்னமாச்சார்யார் க்ருதிகளடங்கிய ஒலி நாடா பற்றி விசாரித்து, திருவேங்கடமுடையான் பற்றின பாசுரம் மற்றும் ஸ்ரீ ராமானுஜரின் 'கத்யத்ரயம்' இவற்றை நன்கு கேட்டறிந்தார். எந்தப் பாடலைப் பாடும் போதும் அதனை நன்கு ணர்ந்து, அவற்றின் பெருமை குன்றாமல் பாட வேண்டுமென்கிற எம்.எஸ்ஸின் எண்ணம் என்னில் வியப்பைத் தோற்றுவித்தது. அவர் மறைந்தாலும் அவர்தம் பாடல்கள் நம்மை விட்டு மறையாது.

- கல்யாணபுரம் ஆர். ஆராவமுதன்

'சமத்துவம்' என்ற வார்த்தைக்கே அர்த்தம் கற்பித் தவர் எம்.எஸ். அம்மா. நான் சின்னப் பெண்ணாக இருந்தபோது என்னுடைய அப்பா, எம்.எஸ். அவர்களின் மாளிகைக்கு என்னை அழைத்துச் சென்றார். எங்களை வாசலுக்கே வந்து வரவேற்றார் அம்மா. சாதாரண காட்டனில் 'பாலும் பழமும்' (அப்போதைய சினிமா) கட்டம் போட்ட புடைவை உடுத்தியிருந்தார். உள்ளே வந்ததும் திருமதி ராதா விசுவநாதனை அறிமுகப் படுத்தினார். அவரும் அதே புடைவைதான். எங்களுக்கு காபி கொண்டு வரச் சொன்னபோது, சமையல் அறையி லிருந்து ஒரு பெண்மணி பணிவுடன் எங்களுக்கு காபியும் தோசையும் கொண்டு வந்து பரிமாறினார். என்ன ஆச்சரி யம், அந்தப் பணிப்பெண்ணும் அதே புடைவையைத்தான் உடுத்தியிருந்தார். அந்த இளவயதில் என் அடி மனதில் ஆழமாய்ப் பதிந்துபோன விஷயம் இது.

- ஷோபென்னெட்,
அமெரிக்கா

காதல் வேறு, காமம் வேறு என்பதாக இக்காலத்துப் புதுமைப் பண்டிதர்கள் கூறுகிறார்கள். "காதல் உயர்ந்தது, தெய்வீகம் வாய்ந்தது; காமம் தாழ்ந்தது, மிருகத்தன்மை பொருந்தியது" என்பது அவர்கள் சித்தாந்தம். ஒரு சமயம் ஒரு பத்திரிகையில் 'காதற் கொலை' என்று ஒரு தலைப்புப் போட்டிருந்தார்கள். அதைக் கண்ட புதுமைப் பண்டிதராகிய எனது நண்பர் ஒருவர் "ஆஹா! என்ன முட்டாள்தனம்? காதலுக்கும், காமத்துக்கும் வித்தியாசம் தெரியாதவர்களெல்லாம் இக்காலத்தில் பத்திரிகாசிரியர்களாய் வந்து விடுகிறார்களே? காதலினால் கொலை விளையுமா? காமத்தினால்தானே அது விளையும். 'காமக் கொலை' என்றல்லவா போட்டிருக்க வேண்டும்?" என்றார். நானும் அச்சமயம் அவருடன் சேர்ந்து அந்தப் பத்திரிகாசிரியரின் புத்திஹீனத்தைக் குறித்துச் சிரித்தேன்.

காதலுக்கும் காமத்துக்குமுள்ள வேற்றுமையை வெகு நன்றாய் அறிந்தவன்போல் அந்த நண்பர் முன் நடித்தேனாயினும், பின்னால் எவ்வளவோ யோசனை செய்து செய்து மண்டையை உடைத்துக் கொண்டும் முடியைப் பிய்த்துக் கொண்டுங்கூட அந்த வித்தியாசம் உண்மையில் எனக்குப் புலனாகவில்லை. முற்காலத்துக் காம சாஸ்திரங்களையும் காவிய நூல்களையும் இக்காலத்து இல்லற இரகசியப் புத்தகங்களையும் நாவல்கள் எனப்படும் நவீன காதல் சாஸ்திரங்களையும் கூடிய வரையில் ஆராய்ந்து பார்த்துங்கூடப் பயன்படவில்லை. இவையெல்லாம் சேர்ந்து எனது மனக் குழப்பத்தை அதிகமாக்கியே விட்டன.

# காதலா... காமமா?

உதாரணமாக, விசுவாமித்திரர், மேனகை கதையை எடுத்துக் கொள்வோம். விசுவாமித்திரர் மூடியிருந்த கண்ணை விழித்தார். எதிரில் மேனகையைக் கண்டார். உடனே காதல் கொண்டார். 'கண்டவுடனே காதல்' என்னும் கொள்கைக்கு இது மிகவும் பொருத்தமாயிருக்கிறது. நியாயமாக இவர்களுடைய கூட்டுறவை தெய்வீகக் காதலால் விளைந்ததாகக் கருதிப் போற்ற வேண்டும். அதற்குப் பதிலாக விசுவாமித்திரர் ஏதோ பெரிய தவறு செய்துவிட்டதாகக் கொண்டு, "கௌசிகன் கெட்டதும் பெண்ணாலே" என்று பாட்டும் பாடிவிட்டார்கள். கௌசிகன் கெட்டது உண்மையானால், அது காதலினாலா? காமத்தினாலா?

நாவல்களில் வருவதுபோன்ற காதல் சம்பவங்கள் நமது வாழ்க்கையில் இல்லையென்றாலும் அடியோடு காதல் இல்லாமல் போய்விடவில்லை. கல்யாணத்திற்குள்ளும் காதல் உண்டென்று சொல்வேன். பெற்றோர் பார்த்துக் கல்யாணம் செய்துவைத்த தம்பதிகளுக்குள் காதல் இராது என்று புதுமைப் பண்டிதர்கள் சிலர் சொல்வார்கள். ஆனால் இது தவறாகும். ஒரு கதை கேளுங்கள் :

ஒரு விதவை ஸ்திரீ தன் ஏக புத்திரனுக்குக் கல்யாணம் செய்து வைத்தாள். அந்தப் பையனுக்குத் தன் மனைவியுடன் கூடிக் குலாவி சல்லாபமாயிருக்க வேண்டுமென்று மிக்க ஆசை. ஆனால் கிழவி அதற்கிடங் கொடுப்பதில்லை. பிள்ளைக்குச் சாப்பாடு அவளேதான் போடுவாள். இரவிலோ, நாட்டுப் பெண்ணைச் சமையல் அறையில் படுக்க வைத்துத் தான் வாசற்படியில் படுத்துக் கொண்டுவிடுவாள்.

பையனுக்குக் காதல் நோய் நாள்தோறும் முற்றி வந்தது. கடைசியில் ஒருநாள் அவன் ஒரு யுக்தி செய்தான். இரவு வெகு நேரங் கழித்து வந்தான். கிழவிக்கு மிகவும் தள்ளாமையாயிருந்தது. "அம்மா! சாதம் போடு!" என்றான். "இவ்வளவு நேரங் கழித்து வந்தாயே, அப்பா! உடம்பு தள்ளாமையாயிருக்கிறது. பழைய சாதம் எடுத்துக் குதிர் இடுக்கில் வைத்திருக்கிறேன். உன் பெண்டாட்டியைத் தான் போடச் சொல்" என்றாள் தாயார். "அந்தச் சனியன் கையாலா சாப்பிடச் சொல்கிறாய், அம்மா? உன் கையால் சாப்

# அமரர் கல்கி



பிட்டால்தான் எனக்குத் திருப்தி" என்றான் பையன். "இன்று ஒரு நாளைக்குச் சாப்பிடப்பா! பாதகமில்லை" என்றாள் தாயார். "என்னமோ போட்டுத் தொலைக்கச் சொல்லு" என்றான் புதல்வன்.

சமையலறைக் குதிரினடியில் இரண்டு பொந்துகள் இருந்தன. இரண்டு பொந்திலும் இரண்டு கற்சட்டிகள் இருந்தன. ஒரு சட்டியில் கிழவி பையனுக்காகச் சாதம் பிசைந்து வைத்திருந்தாள். மற்றொன்றில் எருமை மாட்டுக்காகப் பருத்திக் கொட்டை ஊறப் போட்டிருந்தாள். பெண்ணுக்குத் தன் புருஷனுடன் தனியாகப் பேசப் போகிறோமென்னும் சந்தோஷத்தில் தலைகால் தெரியவில்லை. சாதச் சட்டிக்குப் பதில் பருத்திக் கொட்டைச் சட்டியை எடுத்து வைத்துக் கொண்டாள். பையனோ பரமானந்தத்தில் மூழ்கியிருந்தான். மனைவி பருத்திக் கொட்டையைப் பிடிபிடியாக எடுத்துப் புருஷன் கையில் போட்டு வந்தாள். பையன் அவள் முகத்தைப் பார்த்துக்கொண்டே அவ்வளவு பருத்திக் கொட்டையையும் சாப்பிட்டு விட்டான்!

கிழவி காலையில் எழுந்து பார்த்தபோது பருத்திக் கொட்டைச் சட்டி காலியாயிருந்தது. "அடப்பாவி! அவ்வளவு பருத்திக் கொட்டையையும் எப்படியடா தின்றாய்?" என்றாள். "ஓகோகோ! அதனால்தான் இராத்திரி வயிறு வலித்தது போலிருக்கிறது. குறுவை அரிசிச் சாதமென்றல்லவா நினைத்தேன்?" என்றான் பையன்.

இது கதைதான் என்றாலும் நமது சமூகத்தில் இல்வாழ்க்கைக்குட்பட்ட காதல் நிலைமைக்கு இதுவே தக்க உதாரணம் என்று தோன்றுகிறது. ஆனால் காதற் புலவர்கள் இதைக் காதல் என்பார்களா? காமம் என்பார்களா? என்பதுதான் தெரியவில்லை.

- 'பெண் தெய்வங்கள்' நூலிலிருந்து...
வானதி பதிப்பகம்

## வானவில் வயசு - 6

# அமெரிக்காவுக்கே அல்வா!



மரபின் மைந்தன் முத்தையா



ளமையின் இனிய அம்சங்களில் ஒன்று, எதிர்பார்ப்புகள். பார்க்கப் போகிற சினிமா, கிடைக்கப் போகிற வேலை, ஜெயிக்கப் போகிற காதல் என்று எல்லாவற்றிலுமே ஏகப்பட்ட எதிர்பார்ப்புகள் இருக்கும்.

தன் கனவில் மங்கலாக வந்துபோகிற 'ரகசிய ஸ்நேகிதன்' பற்றி, தன் தோழிகளிடம் ஒரு கல்லூரி மாணவி கலர் கலராய்க் கதையளந்து கொண்டிருந்தாள். ''எனக்கு வரப்போறவர், விவேக் ரேஞ்சுக்கு ஜோவியலா இருக்கணும். டான்ஸ் ஆடணும். பாட்டுப் பாடணும். உலக விஷயங்களை எல்லாம் சுவாரஸ்யமா சொல்லணும். சமையலிலே எனக்கு ஹெல்ப் பண்ணணும்'' என்று பட்டியல் நீண்டது.

அருகில் 'ஹாரிபாட்டர்' படித்துக் கொண்டிருந்த அவளுடைய தம்பி குரல் கொடுத்தான். ''அக்கா! நீ யாரைக் கல்யாணம் பண்ணிக்குவேன்னு எனக்குத் தெரியும்'' தோழிகள் ஆர்வமாகக் கேட்டனர், "யாரை?"

பொடியன் சொன்னான், "சன் டீ.வி.யைத் தான். அதுதானே இத்தனையும் பண்ணும்!''

போன தலைமுறையைக் காட்டிலும் இந்தத் தலைமுறை இளைஞர்களுக்குக் கனவு காண்கிற உரிமை அதிகம். ஏனெனில், அவர்களின் எதிர்பார்ப்புகளுக்கு ஈடுகொடுக்கும் விதமாய் வாய்ப்புகள் வளர்ந்திருக்கின்றன.

முன்பெல்லாம் துனிதாக்கில் ஆங்கிலம் பேசுபவர்களைப் பார்த்து "பீட்டர் விடறாங்கப்பா" என்று பரிகசிப்பார்கள் நண்பர்களும், நண்பிகளும். அந்தக் காலம் ஃபிளைட் ஏறிப் போய் விட்டது. அழகாக ஆங்கிலம் பேசத் தெரிந்தால் அமிஞ்சிக்கரையில் ஒரு கால்சென்டரில் உட்கார்ந்து கொண்டு அமெரிக்காகாரர்களுக்கே அல்வா கொடுக்கிறார்கள் நம்மூர் இளைஞர்கள்.

'உலகம் தட்டையாகிவிட்டது' என்கிற புத்தகம் இப்போது பரபரப்பாக விற்பனையாகி வருகிறது. இதனை எழுதியுள்ள தாமஸ்ஃபீரீட்மேன், இந்தியாவை மையப்படுத்தித்தான் தன் மதிப்பீடுகளை முன் வைக்கிறார்.

அமெரிக்கத் தொழிலதிபர்களின் வருமானவரிக் கணக்கை பெங்களூரில் உட்கார்ந்து கொண்டு சில பேர் சமர்ப்பித்துக் கொண்டிருக்கிறார்களாம். 2003-ல் 25,000 அமெரிக்கர்களின் வருமானவரிக் கணக்கு இங்கிருந்து தாக்கலாகியிருக்கிறது. இது 2004-ல் ஒரு லட்சமாக உயர்ந்தது. 2005-ல் நான்கு லட்சம் அமெரிக்கர்களின் வருமானவரிக் கணக்குகளாவது இங்கிருந்து தாக்கல் ஆகியிருக்குமென்று தகவல் சொல்கிறார்கள்.

பத்துப் பதினைந்து ஆண்டுகளுக்கு முன் வேலையில்லாத் திண்டாட்டம் பெருகியிருந்தபோது கவிஞர் அப்துல் ரகுமான் ஒரு கவிதை எழுதினார். ''வேலை கிடைக்கவில்லை என்று சோம்பிக் கிடக்காதே. நீ நினைத்தால் - வேலை காலி இல்லை என்ற பலகை எழுதியே பிழைத்துக் கொள்ளலாம்'' என்றார். இன்று கதையே வேறு.

இருபத்தோராம் நூற்றாண்டைப்

பொறுத்தவரை, அசரீரிகளின் ஆட்சி ஆரம்பமாகிவிட்டது. ஆள் முக்கிய மில்லை. குரல் முக்கியம். ஆள் முக்கியமில்லை. செயல் முக்கியம் என்றாகிவிட்டது.

நான்கடிக்கு மூன்றடி, கியூபிக் களில் உட்கார்ந்து கொண்டு சர்வ தேச அளவில் அரட்டை அடிக்கிற இளைஞர்களைப் பார்த்தால் பல பெரியவர்களுக்குப் பொறாமை யாகவும் இருக்கும், பெருமையாகவும்



இருக்கும்.

எங்கே பார்த்தாலும் பழைய காலத்துப் பத்துப் பைசா மாதிரி ஓபன் ஸோர்ஸிங், அவுட்ஸோர்சிங், இன் ஸோர்ஸிங் என்ற வார்த்தைகள் புழங்குகின்றன.

இவற்றுக்கு மத்தியில், அமெரிக்காவில் ஜெட் ப்ளூ என்கிற நிறுவனத்தின் நிர்வாக இயக்குனர் ஒரு புதிய உத்தியைக் கண்டுபிடித்தார். பெண்களுக்குக் குழந்தை பிறந்த புதிதில் வேலைக்குப் போக நேர்வது வருத்தமாகத்தான் இருக்கும். மாறாக அவர்கள் வீட்டிலேயே இருந்து கொண்டு, விமான டிக்கெட் முன்பதிவைக் கையாளும் விதமாக வசதி செய்து கொடுத்தார். ஒரு தொலைபேசி, இன்டர்நெட் இணைப்புள்ள கம்ப்யூட்டர்... இவ்வளவுதான் வேண்டியது. இதற்கு 'ஹோம் ஸோர்ஸிங்' என்று பெயர் கொடுத்தார். இதனால் பெண்களின் செயல்திறன் 30% கூடுகிறதாம்.

இந்தியாவில் ஹோம் ஸோர்சிங் செய்வதில் ஒரே ஒரு சிக்கல் இருக்கிறது. என்ன தெரியுமா? டி.வி. சீரியல்கள்தான். வீட்டிலிருந்து வேலை பார்க்கச் சொன்னால் சிலருக்கு டி.வி. பார்க்கத்தானே தோன்றும்.

திறமைகளை எப்படி வளர்த்துக் கொண்டாலும் வாய்ப்புகள் நிச்சயம் என்ற சூழலில் வாழ்ந்து கொண்டிருக்கிறோம் நாம். எனவே முழு தீவிரத்தோடும் தனித்தன்மையோடும் பயிற்சி செய்துகொண்டே இருந்தால் எதிர்பாராத வாய்ப்புகள் நம்மை "எங்கே எங்கே" என்று தேடிக் கொண்டு வரும்.

ஒரு சம்பவம். அந்தச் சிறுவன் ஆர்வமாக பியானோ வாசிப்பான். அவனுக்கு ஊக்கம் கொடுக்க விரும்பிய அம்மா, உலகப் புகழ்பெற்ற பியானோ கலைஞராகிய இக்னேஸ் படேரவ்ஸ்கியின் இசை நிகழ்ச்சிக்கு அனுமதிச் சீட்டுகள் வாங்கியிருந்தார். அரங்கிற்குள் நுழைந்தார். அவரது பழைய சிநேகிதி அமர்ந்திருந்தார். 'பிரிந்தவர் கூடினால் பேசவும் வேண்டுமோ?' பேச்சு சுவாரஸ்யத்தில் பையனைக் கவனிக்கவில்லை அம்மா. நிகழ்ச்சி துவங்கும் நேரம் பையனைக் காணவில்லை. அரங்கின் திரை விலகியது. மேடையில் வைக்கப்பட்டிருந்த பிரம்மாண்டமான பியானோ முன் அமர்ந்து கொண்டு தட்டுத் தடுமாறி "டிவிங்கிள் டிவிங்கிள் லிட்டில் ஸ்டார்" வாசித்துக் கொண்டிருந்தான் சிறுவன். அவன் அம்மாவுக்கோ தர்மசங்கடம். மேடைக்குப் போய் பையனைத் தூக்கிக் கொண்டு வந்துவிட நினைத்தார். அந்த நேரம் பார்த்து, மேடைக்கு வந்துவிட்டார் இக்னேஸ் படேரவ்ஸ்கி.

"நிறுத்தாதே வாசி" என்று சொல்லிக் கொண்டே தானும் சேர்ந்து மெல்ல மெல்ல சிறுவனுக்கு உதவத் தொடங்கினார்.

சிறிது நேரத்திற்குள், சிறந்த மேதையும் சின்னஞ்சிறுவனும் சேர்ந்து மகத்தான ஓர் இசை நிகழ்ச்சியை வழங்கத் தொடங்கி விட்டார்கள்.

அந்தச் சிறுவனின் ஆர்வத்தோடும், திறந்த மனத்தோடும் நம் திறமைகளை மேலும் மேலும் மெருகேற்றிக் கொண்டே வந்தால் போதும்... நிபுணர்களின் வழிகாட்டுதல் நிச்சயம் வந்து சேரும்.

(தொடரும்)

காதலெல்லாம் கல்யாணத்தில் முடிவதில்லை. முடியணும்னு அவசியமில்லை. காதலின் எதிர்பார்ப்புகளும் கல்யாணத்தின் தேவைகளும் வேறு. அதே சமயம் காதலைப் பொதுவா பேசாதீங்க. அது ஒரு அனுபவம். அனுபவம் புரியணும்னா அனுபவித்துப் பார்க்கணும்.

- பிரகாஷ்ராஜ்



யௌவனம், வாலிபம் என்பது உணர்ச்சி வேகங்கள் கட்டறுத்துக் கொண்டு புரளுகிற பருவம். தற்காலத்தில் மிதமிஞ்சிய சக்தியுடன் ஸர்வ ஜனங்களின் மேலும் ஆளுகை செலுத்திக் கொண்டிருக்கிற பாலிடிக்ஸ், ஸினிமா, பத்திரிகைகள், ஸ்போர்ட்ஸ் ஆகியவை அத்தனை பேரையுமே உணர்ச்சி வேகங்களில் தூண்டிவிட்டுக் கொண்டிருக்கையில், தன்னியற்கையாகவேறு அந்த வேகங்களின் எழுச்சிக்கு ஆளாகியிருக்கிற வாலிப வயசு மாணவர்கள் - கல்லூரிகளில் படித்துக் கொண்டிருப்பவர்கள் - ஒழுங்கு முறைகளுக்குக் கட்டுப்பட்டிருப்பது இரண்டு பங்கு (மடங்கு) சிரமம்தான். ஆனாலும் தங்களுடைய எதிர்காலத்துக்கான வளர்ச்சியை முன்னிட்டு அவர்கள் இந்த சிரமத்தை சமாளித்தே தீர வேண்டும். அதிலேயேதான் தேசத்தின் தற்கால அமைதி, எதிர்கால அமைதி ஆகியவையும் அடங்கியிருக்கின்றன. வாலிப வயஸுக்காரர்கள் கட்டுப்பாடு இழந்தால் அவர்களும் கெட்டுப்போய், வீட்டிலும் அமைதி குலைந்து கெட்டுப்போய், நாட்டிலும் அமைதியின்மையே அடிவேர் வரை பரவிக் கெடுத்து விடும்.

கட்டறுத்துப் புரளுகிற இந்த உணர்ச்சி வெள்ளத்துக்கு அணைபோட்டு வைப்பதாகத்தான் நம்முடைய முன்னோர்களான பெரியவர்கள் பாலப் பிராயத்தில் அக்ஷராப்யாஸம் ஆன நாளிலிருந்து தெய்வ பக்தியையும், குரு பக்தியையும், அந்த பக்தியிலிருந்து விளைகிற விநயம் என்கிற அடக்க குணப் பண்பையும் விதித்து, குருகுலத்தில் அதைப் பசங்களுக்கு நடைமுறையாக்கிக் கொடுத்தார்கள்.

- ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய ஸ்வாமிகள்

# அணை போடு!



சூர்யா - ஜோதிகா சூப்பர் ஜோடியின் பலத்தோடு கூட்டணி அமைத்து 'சென்னையில் ஒரு மழைக்காலம்' படத்தை வெற்றிகரமாகக் கொடுத்துவிடலாம் என்று திட்டமிட்டார் டைரக்டர் கௌதம். சென்னைக்கு மழைக்காலம் என்பது கனவாக இருந்த காலம் போய், இப்படியொரு தலைப்பை வைத்த ராசியில் மழை பிய்த்துக் கொண்டு கொட்டியதே என்று கௌதம் கொடுத்த வாய்ப்பை உதறியெறிந்து விட்டுப் போனார். இப்போது 'ஜில்லுன்னு ஒரு காதல்' படத்திற்கும் அசினை இரண்டாவது கதாநாயகியாக கிருஷ்ணா அழைக்க அதே காரணத்திற்காக மறுபடியும் மறுத்திருக்கிறார். அசின், கோட்டை விட்ட அந்தக் காதல் இடைவெளியை நிரப்ப வந்திருக்கிறார் பூமிகா.

அபிஷேக்பச்சனின் செல்லக் கதாநாயகியாக பாலிவுட்டையும், டோலிவுட்டையும் (அதாங்க! தெலுங்குப் படவுலகம்), கலக்கிக் கொண்டிருக்கும் வங்கத்து பூமிகா. இந்த முறை தங்கத்தில் இழைத்த தேவதை மாதிரி திரும்பி வந்திருக்கிறார். வந்தவருக்கு வெயிட்டான ரோல். கதையில் கொஞ்சம் பாலசந்தர்தனம் இருந்தாலும், காதலித்துக் கொண்டிருக்கிறவர்கள், தவறவிட்ட காதலோடு தவித்துக் கொண்டிருக்கிறவர்கள் எல்லோருக்கும், மயிலிறகு ஒத்தடம் மாதிரி படம் செம கலர்ஃபுல் ரகமாம்.

சூர்யாவுக்கும் ஜோதிகாவுக்கும் முதல்





தவிர, படம் பூஜையோடு நின்றுபோனது. இப்போது குருவின் கனவை நனவாக்க வந்திருக்கிறார் கௌதமின் சீடர் கிருஷ்ணா. படத்தின் தலைப்பு ஜில்லுன்னு ஒரு காதல். வந்த வேகத்திலேயே தமிழக யுவன், யுவதிகளின் மனத்தில் சாரல் மழையை விசிறியடித்துக் கொண்டிருக்கிறது.

'சென்னையில் ஒரு மழைக்கால'த்திற்கும் இரண்டாவது கதாநாயகியாக தேர்வு செய்யப்பட்டவர் அசின்தான். ஆனால், ஜோதிகாவுக்குத் தான் படத்தில் அதிக முக்கியத்துவம் இருக்கும்



காட்சியிலேயே திருமணம். அதன்பிறகு அன்பும், அறனும் உடைய இல்லற வாழ்க்கையை பண்பும் பயனுமாய் வாழ்ந்து



# ஜில்லுனு ஒரு கல்யாணம்!

கொண்டிருக்கும்போது புயல் மாதிரி உள்ளே நுழைகிறார் பூமிகா. யார் இந்த பூமிகா? சூர்யாவின் கல்லூரி நாட்களை காதல் மயமாக்கிவிட்டு மறைந்துபோன காதல் பிசாசு. இம்முறை பூமிகாவுடனான பட்டுப்போகாத பழைய காதலுக்கு ஒரே ஒரு நாள் மட்டும் உயிர் கொடுக்கிறார் சூர்யா. எஸ்! பழைய காதலர்களாக ஒரு நாள் பவனி வருகிறார்கள். இதற்கு ஜோதிகா அனுமதி கொடுத்தாரா என்பதுதான் திரைக்கதையாம். கேரளத்து இயக்குனர் லெனின் ராஜேந்திரனின் 'மழை' படத்தைக் கொஞ்சமாய் நினைவூட்டினாலும் அதன் சாயல் இல்லாமல் காதல் சாறு பிழிந்து கொண்டிருக்கிறார் கிருஷ்ணா.

இந்தப் படத்துக்கு இசை ஏ.ஆர்.ரகுமான். இவரை வைத்து ஒரு தனி போட்டோ செஷனே எடுத்து போஸ்டர் அடித்து ஒட்டியிருக்கிறார்கள். ஆறு படத்தில் ரணகள ரவுடியாக ரசிகர்களைக் கலங் கடித்த சூர்யா, ஜில்லுன்னு ஒரு காதலுக் காக கலர்ஃபுல் சூர்யாவாக மாறிவிட் டார். 'சூர்யாவுக்குள் இப்படியொரு ஃபீலிங்ஸா? ஜோதிகாவுக்கு சாக்லெட் செலவு மிச்சம்' என்று இப்போதே எஸ். எம்.எஸ். பரிமாறிக் கொண்டிருக்கின்றனர் கல்லூரி இளசுகள். படத்துக்குச் சம்பந்த மில்லாமல் ஜில்லுன்னு ஒரு கல்யாண செய்தி. இந்தப் படம் முடிந்த கையோடு சூர்யா-ஜோதிகாவின் நிஜ டும்டும் என்கிறது நம்பத்தகுந்த வட்டாரம்.

**- ஸ்ரீசக்கரம்**

படங்கள் உதவி : **நிகில்**



# இன்கமிங் ஃப்ரீ

"அந்தச் சாமியார் தன்னை ஒரு பூஜ்யம்னு அடிக்கடி சொல்லும்போதே சந்தேகப்பட்டேன்!"

"ஏன்?"

"சைபர் க்ரைம்ல ஈடுபட்டிருக்கார்!"

- அம்பை தேவா





"ராணி... கேட்கவே சங்கடமாயிருக்கு. எதிரி மன்னன் உன்னிடம் செல்போனில் நாழிகைக் கணக்கில் பேசறானாமே?"

"பேசினால் என்ன ராஜா, இன் கமிங் ஃப்ரீ தானே!"

- ஞா.ஞானமுத்து

"இராப்பிச்சை! ஏம்பா இப்படிச் சத்தம் போடறே?"

"சத்தம் சோறு போடும் தாயீ"

- லீலாஜி



"பேங்குக்குப் போய்
கீழே விழுந்துட்டேன்."

"ஏன்?"

"பேலன்ஸ் இல்லாமதான்."

-ஆர்.தங்கராஜ்





"இன்னும் இருபத்திநாலு
மணி நேரத்துல புயலும், கன மழையும்
வரப்போகுதாம். டீ.வி.யில சொன்னாங்க."
"நீங்க கேட்டீங்களா?"
"இல்ல அவங்களாத்தான்
சொன்னாங்க."

- ஆனந்தன்

"கொள்ளையடிக்க வந்தது
போலீஸ்காரங்கதான்னு எப்படிக்
கண்டுபிடிச்சாங்க?"
"மரியாதையா நகைகளையெல்லாம்
கழட்டுங்க. இல்லைனா முட்டிக்கு முட்டி
தட்டிடுவோம்னு மிரட்டினாங்களாம்!"

- குட்டி பாக்யராஜ்





" 'மஞ்சுஸ்ரீ, மேஷம்'னு
வீட்டு வாசல்ல நேம்போர்டு
வெச்சிருக்கீங்களே ஏன் மேடம்?"
"ராசியில்லாத நடிகைன்னு யாரும்
திரும்பிப் போய்டக் கூடாதே"

- வீ.விஷ்ணுகுமார்

தமிழ் உணர்வு காரணமாக இலங்கைத் தமிழர்களுக்காக உண்ணாவிரதம் இருந்தேன். மௌன ஊர்வலம் போனேன். இலங்கையில் தமிழர்கள் வாழ்வில் அமைதி திரும்பும் வரை பிறந்த நாள் கொண்டாடுவதில்லை என்று, சுமார் பதினைந்து வருடங்களாகப் பிறந்த நாள் கொண்டாடாமல் தவிர்த்து வருகிறேன். என் மூத்த மகனுக்கு விஜய் பிரபாகரன் என்று பெயர் வைத்தேன். ஒரு தமிழன் என்ற முறையில் நான் வெளிப்படுத்திய இந்த உணர்வு தவறாகப் புரிந்து கொள்ளப்பட்டது.

தி.நகரில் ஒரு ரௌடியின் மூலம் என்மீது ஆசிட் வீசி கொண்டு போனார் பொதுச் செயலாளர் ராமுவசந்தன். இல்லையென்றால் கூட்டத்தினரால் அவர்கள் பாதிக்கப்பட்டிருக்கலாம். நான் அப்போது இப்ராஹிம் வீட்டில் இருந்தேன். இதெல்லாம் ஏன்? எதற்காக?

இந்திரா காந்தி அம்மையார் மதுரைக்கு வந்தபோது நாலாபுறத்திலிருந்து சோடா பாட்டில், கல், அழுகிய முட்டை, அழுகின தக்காளி எல்லாம் அவர் மேல் வீசப்பட்டன.

அன்றைக்கு நெடுமாறன் மட்டும் இல்லாமல் இருந்திருந்தால் இந்திராவின் கதி அதோகதிதான். தன்னை மறைப்பாக நிறுத்தி முதுகைக்



# என்னைக் கொல்ல வந்தவர்கள்!

கொல்ல முயன்றனர். எப்படியோ தப்பித்தேன்.

ஸ்ரீபெரும்புதூரில் ராஜீவ்காந்தி படுகொலை செய்யப்பட்ட மறுநாள், ஒரு பெரிய கூட்டம் கையில் ஆயுதங்களுடன் என் வீட்டைச் சூழ்ந்து தாக்கினார்கள். என்னுடைய புதிய கார் நொறுக்கப்பட்டது.

நல்லவேளை, காரில் இருந்த என் மனைவி, மூத்த மகன் பிரபாகரன் ஆகியோரை உடனே வீட்டுக்குள்



விஜயகாந்த் பேசுகிறேன்!




கொடுத்து நெடுமாறன் அடிகளை வாங்கிக் கொண்டு அந்தத் தலைவியைக் காப்பாற்றினார். இது, நான் ஒரு மாடியில் மறைந்து நின்று பார்த்துப் பதறிப்போன விஷயம்.

இப்படி உயிரைப் பணயம் வைத்து காத்த நெடுமாறனை இந்திரா காங்கிரஸ் என்ன செய்தது..? அன்றைக்குக் கல்லால் அடித்த அதே கட்சியுடன் கூட்டணி வைத்துப் பதவி சுகம் அனுபவிக்கிறார்கள். அரசியலில் நன்றி என்பது மருந்துக்கும் கிடையாது என்பதைத்தான் தெரிந்து கொண்டேன்.



"தலைவர்களிடத்தில் உள்ள சோம்பல், பொறாமை, 'தான்' என்னும் முனைப்பு, ஒற்றுமையின்மை, புறங்கூறல் முதலிய இழிவுகள் நமது நாட்டின் பெருமையையும் எழுச்சியையும் கெடுக்கின்றன. தலைவர்கள் திருந்தினால் நாடு திருந்தும். 'தங்களை' (தன்னலத்தை) மறந்து வேலை செய்யும் தலைவர்கள் தேவை... ஒரு நாட்டின் நாகரிகமோ, அநாகரிகமோ அந்த நாட்டின் அரசியலையன்றோ பொறுத்து நிற்கும்" - தமிழ்த் தென்றல் திரு.வி.க. அவர்களின் இந்த வார்த்தைகள் பல அர்த்தங்கள் பொதிந்தவை. சுயநலமில்லாத நல்ல தலைவர்கள் இந்த நாட்டுக்குத் தேவை. அப்போதுதான் இந்த நாடு உருப்படும் என்ற அக்கறையும் ஆதங்கமும் அதில் உண்டு.

அப்படிப்பட்ட ஒரு தேவை தான் எம்.ஜி.ஆர்., என்.டி.ஆர். போன்றவர்கள் அரசியலுக்கு வரக் காரணமாக அமைந்தது. நானும் சுயநலமில்லாமல்தான் வந்திருக்கிறேன்.

லஞ்ச ஊழலற்ற நல்லாட்சி தர வேண்டும் என்ற நல்ல எண்ணம்தான் என்னை அரசியல் பக்கம் திரும்ப வைத்தது. ஏழை எளிய மக்களுக்காக உழைக்க வேண்டும் என்று நினைக்க வைத்தது.

அரசியலில் எனக்கு என்ன தெரியும்...? நான் பெரிய ராஜ

தந்திரியா? இல்லவே இல்லை... நானும் ஒரு சராசரி இந்தியக் குடிமகன் என்கிற வகையில் எனக்கும் அரசியல் தெரியும். அரசியலில் பங்கேற்கும் தகுதியும் உரிமையும் எனக்கும் உண்டு.



• ராமு வசந்தன்

ராஜாஜி, காமராஜர், அண்ணா, எம்.ஜி.ஆர்.... இவர்களைத்தான் அரசியலில் முன்மாதிரியாகக் கொண்டு நான் செயல்படுகிறேன்.

நாட்டில் இந்து, முஸ்லிம், கிறிஸ்தவர் என்ற பாரபட்சம் எல்லாம் என்னிடம் கிடையாது. மதங்களின் ஒரே நோக்கம் மனிதர்கள், மனிதர்களாக வாழ வேண்டும் என்பதுதான்.

என் வீட்டு பூஜை அறையில் திருப்பதி ஏழுமலையான், விநாயகப் பெருமான், முருகன், ஸ்ரீராகவேந்திரர், சத்ய சாய்பாபா, ஷீர்டி பாபா, புத்தர், வள்ளலார், புனித மெக்கா-மதினா, நாகூர் தர்கா, அன்னை வேளாங்கண்ணி மாதா, இயேசுநாதர் என்று சர்வசமய வழிபாடு உண்டு.

நான் வீட்டிலிருந்து புறப்படும்போது பூஜை அறைக்குப் போய் வணங்கி திருநீறு இட்டுக் கொண்டு அப்படியே எனது இஷ்ட தெய்வங்களையும் எனது .பெற்றோரையும் வணங்கிவிட்டு வெளியே செல்வேன்.

கம்பங்கூழோ, கஞ்சியோ, எது கிடைத்தாலும் சந்தோஷமாய்ச் சாப்பிடும் இயல்புடையவன் நான். அதே போல் வெறும் தரையிலும் கயிற்றுக் கட்டிலிலும் தூங்கிப் பழகியவன்.

இந்தியாவின் இதயம் கிராமங்களில் இருக்கிறது என்றார் தேசப்பிதா

• என் குடும்பம்!

காந்தி. இந்தியாவின் இதயமான கிராமங்களில்தான் எனது ரசிகர்கள் - தொண்டர்கள் வாழ்கிறார்கள். நானும் கிராமத்தில் வாழ்ந்தவன்தான். எனது முன்னோரின் தொழில் விவசாயம். நானும் ஒரு விவசாயிதான்.

நான் நாட்டுக்கும், மக்களுக்கும் உழைக்க வேண்டும் என நினைப்பது பதவி ஆசையால் அல்ல. நான் சாதாரண விஜயராஜாக இருந்தபோதும் சரி, பெரிய நடிகரான போதும் சரி... என்றைக்கும் அடுத்தவர் சொத்துக்கோ, அதிகமாய்ச் சம்பாதிக்க வேண்டுமென்றோ ஒரு நாளும் ஆசைப்பட்டதில்லை.

நான் நினைத்திருந்தால் எப்போதோ எம்.பி., எம்.எல்.ஏ. என்று ஆகியிருப்பேன். பெப்சி, கோக் போன்ற வெளிநாட்டுக் குளிர்பானத்துக்கு விளம்பர மாடலாக நடிக்க எனக்கு ஒரு கோடி கொடுப்பதாகச் சொன்னபோதும், அப்படி நடிக்க மறுத்தவன் நான். காரணம் என் நாட்டு குளிர்பானம், என் நாட்டுத் தொழில் பாதிக்கக்கூடாது என்பதால்தான்.

உலகத்தில் பெரிய கொடுமை பசிக் கொடுமைதான். வயிறு காய்ந்து வந்து நிற்கிறவனுக்கு என்ன சொன்னாலும் ஏறாது. தவிர பெரியவங்க, 'மனுஷனுக்கு எது குடுத்தாலும் எவ்ளோ குடுத்தாலும் பத்தாது. வேணும் வேணும்னுதான் கேட்பான். அவன் போதும்னு சொல்ற ஒரே விஷயம். சோறு மட்டும்தான்'னு சொல்வாங்க. இது என் மனசுல பதிஞ்ச விஷயம்.

நான் எதையும் யோசிச்சுத்தான் முடிவு செய்வேன். அப்படி முடிவு செஞ்சா, அதுல இருந்து பின்வாங்க மாட்டேன். எதையும் விடக்கூடாது; கடைசிக் கட்டம் வரைக்கும் விரட்டணும்ங்கிற பழக்கம் எனக்கு. இன்னும் அரசியலில் சொல்ல நிறைய உண்டு...

**- சொல்றேன்**

படங்கள் : **எஸ்.முத்துக்குமார்**

## விஜயகாந்த் பற்றி வி.ஐ.பி!

'சந்தனக் காற்று' படத்தின் போதே விஜயகாந்த் சார் முன்னணி ஹீரோ. அப்போது நான் இயக்குநர் மணிவண்ணன் சாரிடம் உதவி இயக்குநராக இருந்தேன். அப்போதெல்லாம் 'ஹீரோ என்றால் பெரிய பந்தா பட்டாளத்துடன் வருவார். எல்லாரும் எழுந்து நிற்கணும்' என்றெல்லாம் நினைத்துக் கொண்டிருந்தேன்.

ஆனால் விஜயகாந்த் சார் செட்டுக்குள் நுழைந்தவுடன் எனது கற்பனை தவிடுபொடியாகிவிட்டது. காரணம், அவர் வந்தவுடன் லைட்பாய் முதல் அஸிஸ்டெண்ட் டைரக்டர் வரை எல்லாரிடமும் முதுகில் தட்டி, சட்டை பட்டனை மாட்டி, தலையைக் கோதி இயல்பாக நடந்து கொண்டதும், மனம் கோணாமல் மற்றவர்கள் பாக்கெட்டில் இருந்து உரிமையோடு பேனா எடுத்து ஆட்டோகிராஃப் போட்டுக் கொடுத்ததும், ஒருவர்விடாமல் 'சாப்பிட்டாச்சா' என்று கேட்டு, சாப்பிடாதவர்களைச் சாப்பிட அனுப்பியதும்... 'நான் காண்பது கனவா? அல்லது நனவா?' என்ற நிலைக்குக் கொண்டு போனது. அது இன்னும் தொடர்வது ஆச்சர்யம்.



***- டைரக்டர் சுந்தர் சி.***

# நிழல் கூத்து

மலைவாச ஸ்தலத்தில்
உன்னால் கைவிடப்பட்ட
இந்த இரவும்
தனிமையின் பனிப்பொழிவும்
உறைய வைத்துவிட்டன
என் அறையை

காற்றில் படபடக்கும்
திரைச்சீலையில்
உனது முந்தானையின்
நிழல் கூத்து

போனமுறை வந்தபோது
அவ்வளவு உயரத்தில் போய்
யாரந்த சிலுவையை
வரைந்திருப்பார்கள் என்றாய்

இப்போது
காலத்தின் சுமைவாங்கி
இன்னும்
சிதிலமாகிப் போனது
சிலுவை

அதிகாலையில் எழும் கட்டாயத்தில்
எங்கேயோ ஒரு மணமகள் அறையில்
அரைத் தூக்கத்தில் இருக்கும் உனக்கு
கனவிலாவது வருமா
இந்தச்
சிலுவை குறித்த சித்திரம்

பழநிபாரதி



# சினிமாவுக்குப் போகலாம் வாங்க! 6

'நீதிக்குப் பின் பாசம்...
பாதிக்குப் பின் மோசம்'

- அந்தக் கால சினிமா பத்திரிகையில் வந்த ஒருவரி விமர்சனம்



# அஃகும் பஃகும் பார்க்காதே... ஆளைக் கண்டு மிரளாதே!

"அப்படியே இரு, அசையாதே!" என்று சத்தம் போட்டது அன்பன் சினிமா மணி.. தியேட்டர் கும்பலில் நான் காணாமல் போய்விடக் கூடாதே என கரிசனத்தில் அப்படி ஒரு ஆணையிட்டு என்னை வெலவெலக்கச் செய்து விட்டான்.

தியேட்டரில் கரண்ட் போனவுடன், யாரும் எதைப் பற்றியும் கவலைப்படாமல் கத்தித் தீர்த்தார்கள். ஆபரேட்டர், தியேட்டர்காரர், அவர்கள் பரம்பரை அத்தனை பேருக்கும் வசவு போய்ச் சேர்ந்தது.

நல்ல குணம் கொண்ட சில பரோபகாரிகள் 'படக் படக்'கென்று பீடியைப் பத்த வைத்து, தீபஒளி காட்டினார்கள். அதற்குள் எங்கேயோ போன கரண்ட், எப்படியோ வந்து சேர்ந்தது. திரையில் எம்.ஜி.ஆர். ஒரே கத்தியோடு இருபது பேருடன் சண்டை போட்டுக் கொண்டிருந்தார்.

"பாதிப் படம் போச்சு" என்று ஒருவர் கத்தினார்.

"ரெண்டு ரீல அத்துட்டான்" என்று மதுரையில் படம் பார்த்த ஒருவர் கோபப்பட்டார். ஆனால், அதற்காக யாரும் தியேட்டரில் கவலைப்படவில்லை. ஒரு வழியாக நாங்கள் படம் பார்த்துவிட்டு வெளியே வந்தபோது, அடுத்த 'ஷோ'வைக் காண ஆயிரக்கணக்கான மக்கள் அன்ன ஆகாரமின்றிக் காத்துக் கிடந்தார்கள்.

உள்ளூருக்குள்ளேயே தனியாகப் படம் பார்த்துவிட்டு வெற்றிகரமாக நான் வீடு வந்து சேர்ந்ததால், பக்கத்து ஊர்களிலும் சென்று இரண்டாவது ஆட்டம் படம் பார்த்துவிட்டு வரலாம் என்று எனது நண்பர் குழாம் எனக்கு அறிவுரை கூறினர்.

அப்படிச் சென்று வருவதால் உலக அனுபவம் அதிகம் கிடைக்கும் என்று சினிமா மணியும் தைரியம் சொன்னான். அதற்கு முதலாவது சைக்கிள் ஓட்டக் கற்றுக்கொள்ள வேண்டும் என முடிவாயிற்று.



கு.ஞானசம்பந்தன்

அப்போதெல்லாம் சிறுவர்களுக்கு சைக்கிள் வாடகைக்குத் தரமாட்டார்கள். கடுமையான சிபாரிசுகளைப் பிடித்து, சைக்கிளை எடுத்து நெல் அடிக்கிற களத்துமேட்டுக்கு மூன்று பேராகப் போனோம். என்னை தெனாலிராமனை குதிரையில் ஏற்றுவதுபோல ஏற்றி உட்கார வைத்து இரண்டு பேர் பிடித்துக் கொண்டு ஓடிவந்து 'மிதிடா மிதிடா' என்று கத்தியபடி ஓங்கித் தள்ளிவிட்டார்கள். ஒரு மிதி மிதித்தேன். வண்டியோடு சேர்ந்து குப்பை மேட்டில் விழுந்ததால் மேலெல்லாம் காயம். கண்ணீர் முட்டிக் கொண்டு வந்தது. பிறகென்ன முட்டிக் காலில் அடிபட்டால் வலிக்காதா?

ஒரு வாரம் சென்றது. நாங்கள் ஓரளவு சைக்கிள் ஓட்டக் கற்றுக் கொண்டோம். ஆனால் ஒரு சிக்கல், பெடல் போட்டு ஏறத் தெரியாது. யாராவது சைக்கிளைப் பிடித்துக் கொண்டால் ஏறிவிடுவோம். இறங்கும்போது கட்டாயம் ஒரு போஸ்ட் மரம் அதாவது 'எலக்ட்ரிக் போஸ்ட்' பக்கத்தில் இருந்தால்தான் இறங்க முடியும். இல்லாவிட்டால் ஏழு நாளைக்கு இறங்காமல் சைக்கிள் சுத்தும் சைக்கிள் வீரனைப் போல அலைவோம்.

சில மாதங்களுக்கு முன் ஒரு கூட்டத்திற்குப் போயிருந்தேன். மேடையில் தலைவர் பேச்சுக்குப் பிறகு நான் பேச வேண்டும். நான் கீழே உட்கார்ந்திருந்தேன். என் பால்ய கால நண்பரும் அன்றைக்கு வந்திருந்தார். இருவரும் அருகருகே அமர்ந்து பழைய விஷயங்களைப் பேசிக்கொண்டே இருந்தோம். மேடையில் தலைவரும் பேசிக்கொண்டே இருந்தார்.

'இதோ இந்த ஒரு கருத்தை மட்டும் உங்களுக்குச் சொல்லி' என்று கால் மணி நேரம் பேசினார்.

முடிப்பதற்கு முன்னால் 'இந்த ஒரு செய்தியைக் கூறி' என்று தன் பேச்சை முடிக்காமல் இழுத்துக்கொண்டே இருந்தார்.

என் நண்பர் என் காதோடு சொன்னார். "பாத்தியா? இவரு ஏன் பேச்சை முடிக்க முடியாமல் திண்டாடுகிறார் தெரியுமா? நாம சைக்கிள் பழகி ஓட்டுறப்போ, கீழ இறங்கத் தெரியாம எலெக்டிரிக் போஸ்டைத் தேடி சுத்திச்சுத்தி வருவமே, அதுமாதிரி அவரு பாவம் முடிக்க முடியாமல் அலைபாய்கிறார்' என்றவுடன் நான் சத்தமாகச் சிரிக்க, அவர் 'இத்துடன் என் உரையை முடித்துக் கொள்கிறேன்' என்று கூறி அமர்ந்தார்.

**நா**ங்கள் சைக்கிள் பழகிய சாகசத்தை சினிமா மணியிடம் சொன்னபோது "இதுக்கு நீங்க இவ்வளவு கஷ்டப்பட்டிருக்கவே வேண்டாம், பேசாம 'நீதிக்குப் பின் பாசம்' படம் பார்த்திருக்கலாம்" என்றான்.

"அந்தப் படத்தில் என்ன?" என்றேன் நான். "என்னவா? நம்ம மக்கள் திலகம் எம்.ஜி.ஆர்., கதாநாயகி அபிநய சரஸ்வதி சரோஜாதேவிக்கு ஒரு பாட்டோடு சைக்கிள் கத்துக் குடுப்பார் பாரு. பாட்டு முடியறதுக்குள்ள அவங்க அருமையா சைக்கிள் ஓட்டு வாங்க. 'அக்கம் பக்கம் பாக்காதே... ஆளைக் கண்டு மிரளாதே'ன்னு அருமையான பாட்டு'' என்றான் மணி. எனக்கு இன்னிக்கு வரைக்கும் சினிமா மேல இருக்கிற மோகத்துக்குக் காரணமே இந்த வேகம்தான்னு நான் நினைப்பேன்.

கதாநாயகன் ஒரு பாட்டு லேயே பணக்காரன் ஆயிடுவாரு,

**இ**ரண்டு விஷயங்களுக்காக நான் இதயம் திறப்பேன். ஒன்று காதல். மற்றொன்று சுதந்திரம்: காதலுக்காக நான் உயிரையும் தருவேன். சுதந்திரமென்றால் காதலையே தருவேன்.

- அனிதா ரத்னம்



கதாநாயகி அதே பாட்லே வளர்ந்து பெரிய பெண்ணா மாறிடும். சின்னப் பையனா பள்ளிக் கூடத்துக்குள்ள போற பையன், எழுத்து முடிஞ்சு 'டைரக்ஷன்'னு போடுறப்ப காலேஜ்ல இருந்து வெளில வருவான். அடேயப்பா என்ன வேகம்!

அதிலேயும் சில படங்கள்ல கதாநாயகிக்கு வில்லனால ஆபத்து வந்தவுடன் எங்கேயோ இருந்து வேகமா கதாநாயகன் தேடி வருவான். ரூம் கதவு திறந்துதான் இருக்கும். கண்ணாடிய உடைச்சு உள்ள போவான். மாடிப்படி பக்கத்திலதான் இருக்கும். கம்பி வழியா விறுவிறுன்னு மேலே போயிருவான். அவசரம் பாருங்க வேற என்ன செய்ய முடியும்?

ஒரு படத்திலே இன்ஸ்பெக்டரா வர்ற ஒருத்தர் திருடனைப் பார்த்து துப்பாக்கிய கையில வச்சு 'அசையாதே சுட்டுருவேன்'னு கத்துவாரு' ஏன்னா அவன் அசஞ்சா இவரால சுடமுடியாதா'ன்னு நான் நினைப்பேன்.

**சா**து மாதிரி இருக்கிறவனை சேது மாதிரி மாத்தறதும், சேது மாதிரி இருக்கறவனை சாது மாதிரி மாத்தறதும்தான் காதலோட பெரிய சக்தி.

**- விவேக்**



**ஒ**ரு சுபயோக சுபதினத்தில் நாங்கள் எங்கள் ஊருக்கு பத்து கி.மீ. தூரத்தில் இருந்த வாடிப்பட்டிக்குப் படம் பார்க்கச் செல்வதாகத் திட்டம் தீட்டி இருந்தோம். (பின் குறிப்பு : எனது தந்தையார் அன்று காலைதான் வெளியூர் சென்றிருந்தார்.)

எங்கள் ஊரின் மூன்று வாடகை சைக்கிள் கம்பெனியில் மூன்று சைக்கிள்கள் எடுக்கப்பட்டன. மூன்று பேர் சைக்கிள் எடுத்துக் கொண்டுவர, நாங்கள் ஆறு பேர் ரயில்வே கேட் ஓரத்தில் பட்டாணி, பொரிகடலை, நொறுக்க முடியாத முறுக்கு சகிதமாக நின்றிருந்தோம் மொத்தம் ஒன்பது பேர். மூன்று சைக்கிள். ஒரு சைக்கிளில் மூன்று பேர். 'டிரிபிள்ஸ்' போக வேண்டும்.

அதாவது சீட்டில் ஒருவன் உட்கார்ந்து ஓட்ட, முன்னால் உள்ள பாரில் ஒருவன், பின்னால் கேரியரில் மூன்றாமவன். அவன் இரண்டு பக்கமும் காலைத் தொங்கவிட்டு ஓட்டுபவனோடு சேர்ந்து பெடலை மிதிக்க வேண்டும் அல்லது மிதிப்பதுபோல நடிக்க வேண்டும்.

சைக்கிள்கள் கிளம்பின. போகிற வழியைப் பற்றி எங்கள் முன்னோர்கள் (எங்களுக்கு மூன்று தினங்கள் முன் படம் பார்த்தவர்கள்) எங்களுக்கு கதை கதையாகச் சொல்லியிருந்தார்கள்.

'களத்து மேட்டு ஆலமரத்தடியில் வேகமாக ஓட்ட வேண்டும். காரணம் அதுதான் முத்திருளாண் போன வாரம் தூக்குப் போட்டு நாக்குத் தொங்க செத்த இடம்.

கம்மாக்கரைக்கு இடது பக்கம் பாக்காம ஓட்டணும். ஏன்னா ஆறு மாசத்துக்கு முந்திதான், அந்த ரோட்டோர கிணத்துல ஒரு நிறைமாத கர்ப்பிணி தண்ணி குடிக்க இறங்கி தலைகீழா விழுந்து செத்தா. இப்பவும் கூட இராத்திரி ஒரு மணிக்குக் கையில பிள்ளையோட ஒரு பொம்பளை போற வர்ற எல்லார்கிட்டேயும் 'தண்ணி இருக்காப்பா'ன்னு கேக்குமாம்.

அப்புறம் சின்ன ஊர்களைத் தாண்டும்போது சில தெரு நாய்களும், ஒண்ணு ரெண்டு வெறிநாய்களும் விடாம வீடு வரைக்கும் துரத்தி வர்றது உண்டாம்.

மத்தபடி எந்தப் பயமும் இல்ல. தைரியமா போகலாம்'னு பல பேர் சொல்லி வழியனுப்பி வைக்க, நாங்க அதுக்கெல்லாம் பயந்ததா காட்டாம சைக்கிளை மிதிச்சோம். சினிமா மணி சைக்கிள், டைனமோ லைட்டோடு எங்களுக்கு முன்னே செல்ல. ஊர்க்கோடியில் சில நாய்கள் சோக மாய் ஊளையிடத் தொடங்க...

(ரீல் சுற்றும்)

படம் : **புதூர் சரவணன்**



# காதல்

திருமணத்துக்கு முன் காதலித்தவர் கவிஞர் லீனா மணிமேகலை. திருமணத்துக்குப் பின் காதலை உணர்ந்தவர் கவிஞர் தமிழச்சி. இருவரும் அறிந்த காதலை நாம் அறிவோம்!

**லீனா மணிமேகலை:**

அப்போது நான் ஜெரால்டிடம் உதவியாளராகப் பணிபுரிந்து கொண்டிருந்தேன். அவரும் நானும் வானுக்குக் கீழே உள்ள அத்தனை விஷயங்களையும் பேசும் அளவுக்கு நெருங்கிய நண்பர்களாகியிருந்தோம். என் நண்பர்களிலேயே சிறந்தவர் என்று அவரை உயரத்தில் நிறுத்தியிருந்த போது, ஒரு நாள் என்னைக் காதலிப்பதாகத் தெரிவித்தார்.

ஜெரால்டு அருமையான மனிதர். நல்ல மனது. எதிராளியைச் சிந்திக்க மற்றும் சிரிக்க வைக்கும் சொல்லாற்றல் உடையவர். பொதுவாக நல்ல மனதுடையவர் துணைவராகக் கிடைத்து விட்டால்தான் பல பிரச்னைகள் வந்த வேகத்தில் காணாமல் போய்விடுமே! காதல் விண்ணப்பம் போட்டவருக்குப் புன்னகையை விடையாகத் தந்தேன்.

சீர்திருத்த விஷயங்களைப் பற்றி தெருத் தெருவாகப் பேசி வரும் நான், அதுபோல் வாழ எண்ணியிருந்தேன். இதனால் காதலுக்குச் சம்மதம் சொன்ன மறுவிநாடியே வழக்கமான சடங்குத் திருமணத்துக்கு மறுத்தேன். ஒன்றரை வருடங்கள் திருமணம் பற்றியே நிறைய பேசினோம்.

அறியாத ஒரு ஆணைத் திருமணம் செய்வது அநாகரிகம் என்பது என் கருத்து. ஆணுக்கும் பெண்ணுக்குமான தோழமை எத்தனை திருமணத்தில் உள்ளது? தமிழர்களின் கலாசாரமே காதல் திருமணங்கள் தானே.

உங்களுடைய நண்பரைக் காதலியுங்கள்; அவரையே திருமணம் செய்து கொள்ளுங்கள். இதற்கு என் வாழ்க்கையே சாட்சி. இங்கு நான் நானாக இருக்க முடிகிறது. கடந்த ஒன்றரை வருடத்தில் நான் எட்டு மாதங்கள் வேலை விஷயமாகத் தனியாக வெளிநாட்டில் இருக்க வேண்டி

**தமிழச்சி:**

என் தந்தை தீவிர அரசியல்வாதி. தமிழக அரசியலில் அமைச்சராகப் பணியாற்றியவர். நான் விருதுநகர், மதுரையில்தான் என் படிப்பைத் தொடர்ந்தேன். நான் ஒரு பெரிய அரசியல்வாதியின் மகளாக இருந்ததாலும் இள வயதிலேயே திருமணம் முடித்ததாலும் என்மீது எந்த வாலிபரும் காதல் அம்புகளை வீசவில்லை போலும்.

என் பெற்றோரும் என் தம்பியும் காதல் திருமணம் புரிந்தவர்களே. ஆனால் என்னுடையது பெற்



றோர் பார்த்து வைத்த திருமணம். என் சம்மதத்தைத் தெரிவித்தபோது என்னவரின் முகம் பார்த்திராமல், குணம் அறிந்திடாமலேதான் சம்மதித்தேன்!

என் தந்தை மீது நான் வைத்த காதலினாலும், பாசத்தினாலும் அவருடைய முடிவு சரியாக இருக்குமென்று நம்பினேன்.

திருமணம் முடித்துப் போகும்போது எல்லாமே புதிதாக இருந்தது. காதலில் எப்படி இரு மனங்களும் முழுமையாகப் புரிந்து கொள்வதற்கு நேரம் எடுத்துக் கொள்கிறதோ அதேபோல் திருமணம் முடிந்தபின் எனக்கும் என் கணவருக்கும் புரிதல் ஏற்பட நீண்ட காலமானது. ஆனால் நாளடைவில் என் தந்தையின் தேர்வு சரியானதாகவே இருந்தது. காதலில் கிடைக்கும் புரிதலும் பகிர்தலும் எனக்குத் திருமண வாழ்க்கையிலேயே கிடைத்தது.

நான் பொறுப்புணர்வு கொண்ட பெண் அல்ல. சில சமயங்களில் குழந்தைத்தனமாகவும் முதிர்ச்சியில்லாமலும் கூட நடந்து கொள்வேன். என் அத்தான் (அப்படித்தான் அழைப்பேன்) என்னிடம் உள்ள நிறைகுறைகளோடு அப்படியே என்னை ஏற்றுக் கொண்டார். ஊடல் ஏற்படும் சமயங்களில் நான் வாதிடவும் உரிமை கொடுப்பார். என் வேலை நிமித்தமாக அடிக்கடி வெளியூர் செல்ல நேரிடும். அப்போது அத்தான் ஞாபகம் வந்து ஏங்கும் சமயத்தில் சொல்லிவைத்தாற்போல் செல்போன் மின்னும். எடுத்துப் பார்த்தால் அது என் அத்தான் அனுப்பிய எஸ்.எம்.எஸ்ஸாக இருக்கும். நெகிழ்ந்து விடுவேன். பெண் சுயமாக முடிவெடுக்கும் சுதந்திரத்தை அளிக்கிறது காதல். என்னைக் கேட்டால் ஒரு பெண்தான் தனக்கான துணையைத் தேர்ந்தெடுக்க வேண்டும் என்று ஆணித்தரமாகச் சொல்வேன்.

# நட்பு இவ்வளவு!

...யிருந்தது. ஜெரால்டு என்கிற தோழனைத் திருமணம் செய்து கொண்டதால் குடும்பம், உறவு எல்லாம் மறந்து விட்டு என் வேலைகளில் முழு மூச்சுடன் ஈடுபட முடிந்தது. காதல் தட்பவெப்பத்தில் பரவசமான நான், முன்பைவிட அதிகமாக எழுதினேன். என் கவிதைகளில் ஒருவிதமான குதூகலம் தொற்றிக் கொண்டது.

'நீ வெங்காயத்தை நறுக்கி வை; நான் சமைக்கிறேன்' என்று இருவரும் வேலைகளைப் பங்கு பிரித்துக் கொள்கிறோம். காதல் திருமணத்தில்தான்

இதுபோன்ற புரிதலும் பகிர்தலும் சாத்தியம். எங்கே கிளம்பிவிட்டீர்கள் காதலிக்கவா?



தொகுப்பு:
**ச.ந.கண்ணன்**
படங்கள் : ஸ்ரீஹரி, புதூர் சரவணன்

# பயம் பயமறிய

வந்து நின்ற ஜீப்பிலிருந்து இறங்கிய அதிகாரி, சற்று உரத்த குரலில் கேட்டார்.

"எங்களுக்கு போன் பண்ணினது யாரு?"

"நாங்கதான் ஸார்."

தயங்கித் தயங்கி தனக்கு முன்னால் வந்து நின்ற அந்த இரண்டு பெண்களை உற்றுப் பார்த்தார் அந்த அதிகாரி. இருவரும் இளம் பெண்கள், அழகானவர்கள். கூடுதலாக வெள்ளையர்களாகவும் இருந்திருந்தால், அந்த அதிகாரியின் முகத்தில் சற்று மலர்ச்சி காணப்பட்டிருக்கும். ஆனால் அவர்கள் கறுப்பர்கள்.

"எதுக்காக கூப்பிட்டீங்க?"

"கொஞ்ச நேரத்துக்கு முன்னால நாங்க ரெண்டு பேரும் இங்க உட்கார்ந்து பேசிட்டிருந்தோம். அப்போ ஒரு வெள்ளைக்காரன், பையன் ஒருத்தனைத் துரத்திட்டு ஓடி வந்துட்டிருந்தான். அவனைப் பார்க்கவே ரொம்ப பயமாயிருந்துச்சு, அதான் உங்களைக் கூப்பிடலாம்னு..."





"இந்தச் சின்ன விஷயத்துக்குப் போய் என்னைக் கூப்பிடணுமா?" என்ற அதிகாரியின் குரலில் வெறுப்பும் எரிச்சலும் கலந்திருந்தன.

'இந்தக் கறுப்பர்களுக்கு சதாசர்வ காலமும் பிரச்னைதான். எதற்கெடுத்தாலும் பயம்; எல்லோர் மீதும் சந்தேகம். சாதாரண சின்ன விஷயத்துக்குக்கூட போலீஸைக் கூப்பிட்டு விடுவார்கள், ஏதோ போலீஸார் இவர்கள் வீட்டு வேலைக்காரர்களைப் போல. ச்சே... எவனோ ஒருவன் எவனையோ துரத்திக் கொண்டு ஓடினானாம். அதை நான் துப்புத் துலக்க வேண்டுமாம். என்ன வேலை இது?'

"சார், அந்தப் பையன் ரொம்ப பாவம். ரொம்ப பயந்து போய் ஓடிட்டிருந்தான்."

'இவளுக்கு எப்படித் தெரியும் அவன் பயந்து ஓடிக் கொண்டிருந்தான் என்று? இந்தக் கறுப்பர்களுக்கு எதில் குறையிருக்கிறதோ இல்லையோ, கற்பனை வளத்தில் மட்டும் குறையே இல்லை. என்ன செய்வது? விதியை நொந்தபடி வேலையைச் செய்ய வேண்டியதுதான்.'

"சரிம்மா, துரத்திட்டு வந்த ஆளு யாரு? அவன் வீட்டைக் காட்டு..."

தனக்கு முன்னால் நடந்துசென்ற சான்ட்ரா, நிக்கோலி எனும் இரண்டு பெண்களைத் தொடர்ந்து உற்சாகமின்றி நடந்து சென்றார் அவர்.

அந்தப் பகுதியின் பெயர் மீல்வாக்கி. மிஷிகன் நதிக்கரையை ஒட்டினாற்போல் அமைந்துள்ள ஒரு கனகாம்பர நகரம். சுமார் 7,00,000 மக்கள் தொகை கொண்ட இந்த நகரத்தில் அமெரிக்கக் கறுப்பர்களும், வெள்ளையர்களும் கலந்தேயிருக்கின்றனர், பக்கத்து பக்கத்து வீடுகளில். மிகச் சமீபமாக 1990களில் கூட இங்கு கறுப்பர்கள் வேறு மாதிரியாகத்தான் நடத்தப்பட்டனர். கறுப்பர்கள் தரும் டாலர் நோட்

# ஆவல்!




மருதன்

டுக்கள் வேண்டும். ஆனால் கறுப்பர்கள் மட்டும் வேண்டாம்.

'இதோ இந்த வீடுதான்' என்று சொல்லிவிட்டு ஒருவித பயத்துடன் இரண்டு பெண்களும் பின்வாங்க, அந்த அதிகாரி அந்த வீட்டுக் கதவைத் தட்டினார்.

புன்முறுவலுடன் கதவைத் திறந்து வெளியே வந்த அந்த மனிதனுக்கு முப்பது வயதுக்கு மேல் இருக்காது. அவனைக் கண்டதும் அந்த அதிகாரியும் புன்முறுவல் செய்தார். இருவரும் கைகுலுக்கிக் கொண்டனர். (அவன் வெள்ளைக்காரன் என்று தனியாகச் சொல்லத் தேவையில்லை)

அந்தப் பெண்களிடம் திரும்பினார் அதிகாரி, "நீங்க சொன்னது இவரைத் தானா?"

அவர்கள் தலையசைத்தனர். அதிகாரி தனது விசாரணையைத் தொடங்கினார்.

"நீங்க யாரையோ துரத்திட்டு ஓடினீங்களாமே... இவங்க கம்ப்ளையிண்ட் கொடுத்திருக்காங்க. யார் அந்தப் பையன்?"

அந்த இரண்டு பெண்களையும் ஒரு தான். ஒரே ஒரு நிமிஷம் அந்தப் பையனைக் கூப்பிடுங்க. பார்த்துட்டுப் போயிடறேன்."

வீட்டுக்குள்ளிருந்து வெளியே வந்த அந்த பத்தொன்பது வயது ஆசிய இளைஞனின் முகத்தில் எந்தவித உணர்ச்சியும் இல்லை. இரண்டு நிமிடங்கள் நின்று பார்த்துவிட்டு மீண்டும் வீட்டுக்குள் சென்றுவிட்டான். அந்த மனிதனிடம் மன்னிப்பு கேட்டுவிட்டு அந்தப் பெண்களை ஒரு முறை முறைத்துவிட்டு கடுப்புடன் ஜீப்பில் ஏறி போயே போய் விட்டார் அந்த அதிகாரி.

புகார் கொடுத்த கறுப்புப் பெண்களின் கண்களில் அப்பட்டமாய் தெரிந்த பயத்தை, அந்த அதிகாரி கடைசிவரை கண்டுகொள்ள



விநாடி உற்றுப் பார்த்த அந்த மனிதன் மீண்டும் புன்னகைத்தான். "ஓ... நீங்க அந்தப் பையனை கேட்கறீங்களா? அவன் என்னோட ஃப்ரெண்ட்தான். என் வீட்லதான் தங்கியிருக்கான். அடிக்கடி இப்படித்தான் ஓடிப்பிடிச்சு விளையாடுவோம். அது சரி. இதையெல்லாம் ஏன் கேட்கறீங்க? விளையாடறது கூட தப்பா என்ன?" சொல்லிவிட்டு கலகலவெனச் சிரித்தான் அவன்.

அதிகாரி சிரித்தார். "நோ... நோ... ஜஸ்ட் ஒரு என்கொயரி அவ்வளவு

வில்லை. வீட்டுக்குள்ளிருந்து வந்து எட்டிப்பார்த்த அந்த 19 வயதுப் 'பையனின்' வெளிறிய முகத்தையும் அந்த அதிகாரி கவனிக்கவில்லை. ஒரு வேளை கவனித்திருந்தால், மனிதர்களைக் கொன்று, அவர்களது உடலைச் சிறிது சிறிதாகத் தின்னும் ஒரு கொடூர மனநோயாளியை ஆரம்ப கட்டத்திலேயே மடக்கிப் பிடித்திருப்பார்.

(திகில் பரவும்)

பட்டுக்கோட்டை பிரபாகர்



# வானவில்லை காணவில்லை!

நிஜமாகத்தான். அதெப்படி தோன்றிய ஒரே விநாடியில் காணாமல் போக முடியும்? 'எங்கே தொலைந்து போனாய் என் அருமை வானவில்லே?' என்று கத்தினேன். பதிலில்லை. 'சரி, ஏன் தொலைந்து போனாய்?' என்றேன். அசரீரியாகப் பதில் சொன்னது வானவில், 'வெட்கத்தினால்' என்று. 'என்ன வெட்கம்?' என்று விசாரித்தேன். 'அவள் புன்னகையைப் பார்த்ததும் வெட்கம் வராதா? தாழ்வு மனப்பான்மையால் தலைமறைவானேன்' என்றது வானவில். 'எவள்?' என்றேன். உன் பெயர் சொன்னது.

சிரிக்கிறாயா சந்தியா? வானவில் இருக்கட்டும், சமயத்தில் எனக்குக் கூட அந்தக் குறுகுறுப்பு உண்டு தெரியுமா? உணவு விடுதிகளின் கை கழுவுமிடத்தில் கண்ணாடிகளில் இருவரும் அருகருகில் நின்று செயல்படும்போது, இந்த அழகு தேவதைக்கு நான் பொருத்தம்தானா என்று ஒரு கேள்வி மின்னல் மனதில் வெட்டும்.

அன்றொரு நாள் கடற்கரையில் கக்கத்தில் இடுக்கிய மூங்கில் கூடையுடன், கையில் கறுப்புக் குச்சியுடன் வற்புறுத்தி குறி கேட்க வைத்த சுமங்கலி 'இரண்டு பேரும் கை நீட்டுங்கள்' என்றதும், நீட்டினோமே... பக்கம் பக்கமாக நம் கைகளைப் பார்த்ததும் எனக்கு ஒரு கட்சிக் கொடியின் நிறங்கள்தாம் நினைவுக்கு வந்தன.

நீயே யோசித்துப் பார் கண்மணி, ஆம்ஸ்ட்ராங் நிலாவுக்குச் சென்று காலடி வைத்தது சாதனைதான். ஆனால்... நிலா அங்கிருந்து மெனக்கெட்டு பூமிக்கு வந்து, விலாசம் விசாரித்துச் சென்று ஆம்ஸ்ட்ராங்கின் கன்னத்தில் முத்தமிட்டால்... அது? நீதான் அந்த பூமிக்கு வந்த நிலா. நான்தான் அந்த அதிர்ஷ்டக்கார ஆம்ஸ்ட்ராங்! ஹரியானா லாட்டரியில் பரிசு விழுந்தால் அதிர்ஷ்டம். லாட்டரியில் பரிசாக ஹரியானாவே விழுந்தால் பேரதிர்ஷ்டம் இல்லையா? உன் பார்வையில் பட்டாலே வரமென்று கணிசமான மக்கள் தொகை காத்திருக்க... வாழ்நாள் முழுக்க பார்த்துக் கொள் என்று நீ எனக்கு வழங்கியுள்ள அனுமதியை வேறெப்படிச் சொல்வதாம்?

சந்தியா, எதுவுமே மிகையில்லை. என் மனதில் தவழும் அப்பட்டமான உணர்வுகள்! சிறிய பொருளைத்தான் பூதக் கண்ணாடி வைத்துப் பார்த்து பெரிதாக உணர முடியும். உன்னைப் பற்றிய என் உணர்வுகள் ஒவ்வொன்றுமே ஒரு பூதம் அளவுதான். பூதத்தை எப்படி பூதக் கண்ணாடி வைத்துப் பார்க்க முடியும்?

காதல் பற்றி கவிதை எழுதும் கவிஞர்கள்

மேல் பொறாமையாக வருகிறது. எரிச்சலாகவும் வருகிறது. என் இதயம் லப்-டப் என்பதற்குப் பதிலாக சந்தியா – சந்தியா என்று துடிக்கிறது என்கிற உண்மையை எழுதலாம் என் றால்... அது ஏற்கெனவே எழுதப்பட்ட கற்பனையாக இருக்கிறது. என் கல்லறையில் 'இவன் ஒரு தேவதையின் காதலால் ஆசீர்வதிக்கப்பட்டவன்' என்று எழுதி வைக்கச் சொல்ல வேண்டுமென்றால், புரட்டிப் புரட்டித் தேடினால் எவனாவது இதையும் யோசித்திருப்பான்.



ஆனால் ஒன்று சந்தியா. உன்னை நேசிக்கத் துவங்கிய பிறகுதான் ஆசை ஆசையாய் ஆசைகளைச் சொல்ல நம் மொழியில் இத்தனை வார்த்தைகள் இருக்கின்றன என்பதையே தெரிந்து கொண்டேன். தமிழ் வாழ்க! வாழ்ந்தால் தான் அடுத்தடுத்த தலைமுறையும் என்போல காதலை இதயம் மணக்க பரிமாறிக் கொள்ள முடியும்.

**கா**தல் உயர்வாக மதிக்கப்பட வேண்டும். அது காதலர்களின் கையில்தான் உள்ளது. அதற்கு முன்பு தகுதிகளை வளர்த்துக் கொள்ளுங்கள். காதலிக்கிற தகுதி, காதலிக்கப்படுகிற தகுதி, காதலனாகிற தகுதி... என உங்கள் தகுதிகளே காதலுக்கு அங்கீகாரமளிக்க வேண்டும்.

- ஆர். நட்ராஜ்



கண்டதும் படித்தால் பண்டிதனாகலாம் என்பார்கள். ஆயிரம் பேரைக் கொன்றால் அரை வைத்தியன் என்பார்கள். உன்னை இடைவிடாமல் காதலித்துக் காதலித்து, காதலிப்பதிலேயே நான் நிபுணனாகி விட்டேன். முன்பெல்லாம் என் மற்ற வேலைகளுக்கு நடுநடுவில் உன்னை நினைத்த நான், இப்போதெல்லாம் உன்னை நினைப்பதற்கு நடுநடுவில்தான் மற்ற வேலைகளைச் செய்கிறேன். சாப்பிட வேண்டுமென்றால் சாப்பாடு வேண்டும். ஆனால் உன்னை நினைக்க வேண்டுமென்றால் நீ வேண்டாமே. உன்னை நினைப்பதும் நேசிப்பதும் சுவாசம்போல அனிச்சைச் செயலாகிவிட்டன. சுவாசம் என்றது மிகச் சரியே. உறக்கத்தில் கூட சுவாசத்தை நிறுத்தி வைப்பதில்லையே...

உன்னைச் சந்திப்பதற்கு முன்பாக உன் வாழ்வின் லட்சியம் என்ன என்ற கேள்விக்குப் பெரிய தொழிலதிபராக வேண்டும், உலக நாடுகள் முழுதும் சுற்றி வர வேண்டும் என்றெல்லாம் முட்டாள்தனமாக உளறிக் கொண்டிருந்தேன். இப்போது கேட்கச் சொல், தெளிவாகச் சொல்கிறேன் 'ஒவ்வொரு விநாடியும் சந்தியாவை நேசிப்பது மட்டுமே' என்று.

ஏய் சந்தியா, ரொம்ப நாளாக உன்னை ஒன்று கேட்க வேண்டும் என்று நினைத்து நினைத்து மறந்து போகிறேன். இப்போது கேட்டு விடுகிறேன். என் கடிதங்களை எல்லாம் நீ என்ன செய்கிறாய்? வீட்டில் யார் பார்வையிலும் படாமல் படிப்பதற்குள் போதும் போதும் என்றாகிறது என்பாயே... அதனால்தான் கேட்கிறேன். கிழித்து வீசிவிடுகிறாயா, அல்லது நெருப்பில் எரித்து விடுகிறாயா?

உன் கடிதங்களை நான் என்ன செய்கிறேன் என்று சொல்லட்டுமா? அவற்றுக்காகவே நவீன விலை உயர்ந்த ஃபைல்கள் வாங்குகிறேன். உன் முதல் கடிதம் முதல் முந்தா நாள் கடிதம் வரை என் போட்டு, தேதி வாரியாகச் செருகி வைத்திருக்கிறேன். ஏனா? என்னதான் படிக்கும்போதே ஒவ்வொரு வரியும் மனப்பாடமாகி விடுகிறதென்றாலும், உன் கையெழுத்தில் மீண்டும் மீண்டும் படிப்பது சுகமல்லவா?

திடீரென்று ராத்திரி இரண்டு மணிக்குக் கூட கடிதங்களை முதலிலிருந்து படிக்க வேண்டுமென்று தோன்றும். எழுந்து உட்கார்ந்து விடுவேன். அம்மா கதவைத் தட்டி, 'டேய் ரகு, இன்னிக்கு ஆபீஸ் போகலையா? மணி பத்தே கால்' என்று குரல் கொடுக்கும்போதுதான் ஜன்னலுக்கு வெளியே வெளிச்சம் பார்த்தும் நம்ப முடியாமல் நம்புவேன்.

உன் முதல் கடிதம் உனக்கு நினைவிருக்கிறதா? பஸ்ஸில் மௌனப் பார்வைகளால் லட்சம் வார்த்தைகளைக் கொடுத்து வாங்கிய பிறகு, அன்று என் பஸ் டிக்கெட்டில் 'மாலை ஐந்து மணிக்கு கடற்கரையில் சந்திப்போமா?' என்று எழுதி உனக்குத் தந்தேன். உன் பஸ் டிக்கெட்டில் 'சரி' என்று எழுதி எனக்குத் தந்தாய். அந்த இரண்டெழுத்து, ஒரு வார்த்தைதான் உன் முதல் கடிதம். சந்திப்புக்குச் சம்மதமென்றால் அது என் காதலுக்கும் சம்மதம் என்றுதானே பொருள்? எனில்... ஆங்கிலத்தில் மூன்று வார்த்தைகளில் சொல்லும் காதலை நீ ஒரே வார்த்தையில் சொல்லி விட்டாய்.

அதைவிடச் சிக்கனம் நீ என்னிடம் பேசிய முதல் வார்த்தை! கடற்கரையில் தவிக்கும் இதயத்துடன் காத்திருந்த எனக்கு உன்னை தூரத்தில் பார்த்ததும் சிலிர்ப்பில் மயக்கம் வந்தது. தங்கத்

தேராக அசைந்து வந்தாய். தரிசனத்தில் பரவசமாகும் பக்தனாக நான். அருகில் வந்து நின்றாய். முகம் பார்க்கவில்லை. எங்கோ பார்த்தாய். உன் விரல்களில் மெலிதான நடுக்கம். 'எதற்குச் சந்திக்க வரச் சொன்னாய்?' என்று உன் மௌனம் விசாரித்தது. 'அப்படி உக்காருவமா? என்றேன். அப்போதுதான் என்னிடம் அந்த முதல் வைர வார்த்தையை... இல்லை... எழுத்தைச் சிந்தினாய், 'ம்' என்று.

அந்த முதல் சந்திப்பில் நம் இரண்டு பேருக்கும் உலகின் எல்லா மனிதர்களும், மொழிகளும் காணாமல் போய் விட்டார்கள், விட்டன. முதலாக, புதிதாக எழுந்து நின்று நடை பழகும் குழந்தையைப் போல நம் பார்வைகள், வார்த்தைகள் தடுக்கித் தடுக்கி விழுந்தன. கொஞ்சம்தான் பேசினோம். மிச்சத்தை நிரப்பிக் கொண்டோம்.

ஆனால் நான் யாரோ, நீ யாரோ என்றிருந்த விலகலை உடைத்து நொறுக்கி உனக்குள் நான், எனக்குள் நீ என்று காதலை விதைத்துக் கொண்ட அந்த முதல் சந்திப்பின் ஒவ்வொரு விநாடிகளையும் இப்போது நினைத்தாலும், எப்போது நினைத்தாலும்... அது ஒரு படைக்கப்படாத காவியம்! காற்றில் கலந்துவிட்ட கவிதை!

அந்தச் சந்திப்பில் நீ என் கோணத்தில் எப்படி இருந்தாய்

**கா**தல் என்கிற மூன்று எழுத்து தரும் இன்பத்தை வேறு எதனாலும் உலகத்தில் தர முடியாது. அதே நேரத்தில் காதலில் தவறு செய்தால் அது தருகிற துன்பத்தை உலகில் வேறு எதனாலும் தர முடியாது!

\- பெப்ஸி உமா



**கா**தலிப்பதைவிட காதலிக்கப் படுவதுதான் சிறந்தது என்கிறார்கள். என்னைப் பொறுத்தவரை காதலே சிறந்ததுதான்!

\- த்ரிஷா



என்று இப்போதும் என்னால் மனதிற்குள் மட்டும் ஓவியம் வரைய முடியும். சுழற்றி விடப்பட்ட உன் காலணிகளும், என் காலணிகளும் தொட்டுக் கொண்டிருந்ததை நான் புருவ அசைப்பால் உனக்குக் காட்ட... 'ச்சி' என்கிற குறும்பு வார்த்தைக்கான பிரதிபலிப்பை மட்டும் முகத்தில் காட்டினாய் நீ. பச்சை, சிவப்பு என்று பன்னிரண்டு ஒல்லியான வளையல்களை நீ அணிந்திருந்தாய். பின்னாளில் இப்படி விவரக் குறிப்புத் தர... அப்போது நான் எண்ணி வைத்தேன். மறுகையில் கறுப்பு லெதர் ஸ்ட்ராப்புடன் குட்டி வாட்ச். அதன் நடுவில் குட்டி சாய்பாபா ஸ்டிக்கர். வெளிறின ஊதா நிறப் புடைவையில் சின்னச் சின்ன சதுரங்கள். ஒரு சதுரம் கறுப்பால், மறு சதுரம் வெள்ளையால் நிரப்பப்பட்டிருந்தன. சரியா?

வழக்கமாக பஸ் பயணங்களில் உன் சின்ன செயினில் டாலர் இருக்கிறதா வென்றே தெரியாது. ஆனால் அன்று டாலர் தெரிந்தது - வெளியே எடுத்துத் தொங்க விட்டிருந்தாய், டாலராக சின்ன பிள்ளையார்.

இரண்டுபுறமும் ஏற்றி வாரி தனித்தனி கிளிப்புகள் வைத்து, மற்றபடி லூசாக விடப்பட்டிருந்த நீளமான கூந்தலைத் தொகுத்து முன்புறம் போட்டிருந்தாய். காதோரம் கூந்தல் சுருள் உன் கன்னத்தில் சும்மா சும்மா முத்தமிட்டுக் கொண்டிருந்ததும் நினைவிருக்கிறது. லிப்ஸ்டிக் பூசாமலே அழகு சுமந்த சின்ன உதடுகள். திருத்தப்பட்ட புருவங்களுக்கிடையில் கவிழ்த்துப் போட்ட குட்டி ஹார்ட்டின் பொட்டு. வழக்கமாக வட்டப் பொட்டுதான் இருக்கும்.

முதல் உரையாடலைச் சொல்லட்டுமா இப்போது?

'பூ வேணுமாம்மா?' என்று வந்தாள் அச்சிறுமி.

வேண்டுமா என்று கண்களால் கேட்டேன். வேண்டாம் என்று தலையசைப்பால் சொன்னாய். அவளை அனுப்பிவிட்டு, 'ஏன் வேணாம்?' என்றேன் நான் கேள்வியின் நாயகனாய்.

'வீட்ல தெரிஞ்சிடும்' என்றாய்.

'போறப்ப எடுத்துப் போட்டுட்டுப் போலாமில்ல?' என்றேன்.

'முதமுதல்ல நீங்க வாங்கித் தர்றதை எப்படித் தூக்கிப்போட மனசு வரும்?' என்றாய்.

காதலின் முதல் போதையை உணர்ந்த விநாடி அது!

'நான் உனக்கு என்ன வாங்கித் தரட்டும்?' என்றேன்.

'இப்போதைக்கு ஐஸ்க்ரீம்' என்றாய்.

அன்றிலிருந்து நாக்கில் துவங்கிய தித்திப்பு மனதில் தொடர்ந்தது.

சந்தியா, நம் காதலுக்காக நன்றி சொல்ல முடிவெடுத்தால், அந்தப் பட்டியலில் முதலாவதாகக் கடவுள். அடுத்ததாக யார் தெரியுமா? உன், என் பெற்றோர்! அவர்களால்தானே நீயும், நானும்!

அடுத்த ஜென்மத்திலும் நீயே என் காதலியாக வருவதென்றால், கடவுளுக்கு ஒரு விண்ணப்பம் வைத்திருக்கிறேன். போன ஜென்மத்துக் காதலிதான் நீ என்று அடுத்த ஜென்மத்தில் நான் உணரும் சக்தி வேண்டும். இல்லை என்றால் என் இந்த ஜென்மத்தின் பிரார்த்தனை நிறைவேறியது எனக்குத் தெரியாமலேயே போய் விடுமே...

ஆகவே...

**க**ட்டிலில் படுத்திருந்த ரகுவிடமிருந்து விஸ்கி வாடை வீசியது. சுவரில் சாய்ந்து அமர்ந்திருந்தாள் சந்தியா. டியூஷன் முடிந்து பக்கத்து வீட்டிலிருந்து ஓடி வந்த பவானி, "உதட்ல என்னம்மா ரத்தம்? என்னம்மா படிச்சிட்டிருக்கே?" என்றாள். ○

சர்ச்சை

# அக்கறையா... அவமானமா?

“ஒரு மதம் தன் வீட்டுப் பெண்களை வெளியே செல்லும் போது ‘பர்தா’ அணிந்துதான் செல்ல வேண்டும் என்று கட்டாயப்படுத்தும். ஆனால் அதே மதத்துப் பெண்கள்தான் தம்முடைய வீட்டில் கழிப்பறைகளைக் கட்டிக் கொள்ளாமல் சாலை ஓரங்களுக்கும், காட்டுப் பகுதிகளுக்கும் செல்கின்றனர். மற்ற மதப் பெண்கள் யாரும் அப்படிச் செல்வதில்லை.”

- இஸ்லாமியப் பெண்களை நோக்கி இப்படி மதவாத அஸ்திரம் தொடுத்திருக்கிறார் குஜராத் முதல்வர் நரேந்திர மோடி. இந்த சர்ச்சைக்குரிய பேச்சு இஸ்லாமியரிடையே மட்டுமின்றி, பல தரப்பினரிடமும் கடுமையான அதிர்வுகளை ஏற்படுத்தி இருக்கிறது.

இதுதொடர்பாக பிரபல வழக்கறிஞரும் திராவிடர் கழகப் பேச்சாளருமான அருள்மொழியும், பாரதிய ஜனதாவின் தேசிய பொதுக்குழு உறுப்பினரும் குமரி.அனந்தனின் மகளுமான டாக்டர். தமிழிசை சௌந்தர்ராஜனும் நேருக்கு நேர் பேசியதிலிருந்து (மோதியதிலிருந்து):

**டாக்டர் தமிழிசை:** பத்திரிகைகளில் வந்ததை வைத்து இப்போது மோடி மீது சிலர் கண்டனம் தெரிவிக்கின்றனர். மோடி மேடையில் பேசும்போது அவருடன் ராஷ்டிரிய ஜனதாதள அமைச்சர் ரகுவன்ஸ் பிரசாத், நவ்ஜோத்சிங் சித்து, பிரபல மதத் தலைவர் மொராரி பாபு உள்ளிட்டோர் இருந்துள்ளனர். இதில் ரகுவன்ஸ் பிரசாத் மதச்சார்பின்மைக்கு ஆதரவாக எங்களைக் கடுமையாகச் சாடுபவர். அவரைப் பார்த்து, ‘நீங்கள் பெண்களின் பர்தாவைப் பற்றிக் கவலைப்படுகிறீர்கள். அதேபோல் அவர்களுடைய இயற்கை உபாதைகளுக்குச் செல்லுகின்ற இடம் பற்றியும் சிந்தியுங்கள்’ என்ற அர்த்தத்தில்தான் மோடி பேசியிருக்கிறார். ஆகவே



• நரேந்திர மோடி

இதை முஸ்லிம் பெண்களை அவமானப் படுத்துவதாக எடுத்துக் கொள்ள முடியாது.

**அருள்மொழி:** மதவாதத்தைப் பற்றி எங்கு பேச வேண்டும்... சேனிட்டரி விஷயங்களைப் பற்றி எங்கு பேச வேண்டும் என்று ஒரு வரையறை இருக்கிறது. நம்முடைய மத நம்பிக்கைகளுக்கும், பழக்க வழக்கங்களுக்கும் எவ்விதத் தொடர்பும் இல்லை. ஆத்திகம் பேசும் உங்களுக்கும், நாத்திகம் பேசும் எனக்கும் சேனிட்டரி பிரச்னை என்பது ஒன்றுதான். ஆகவே கழிப்பிட பிரச்னையைப் பற்றிப் பேசும்போதுகூட ஒரு மத அடையாளத்தைச் சொல்லி அந்தப் பெண்களை இழிவுபடுத்தாமல் பேச முடியாத அளவுக்கு மோடியின் ரத்தத்தில் மத நஞ்சு உள்ளது என்பதையே இது காட்டுகிறது. இன்னும் சொல்லப்போனால் வேற்று மத நம்பிக்கையாளர்கள் பற்றிப் பேசுபவர்கள், தாங்கள் சார்ந்த மதப் பெண்களையும் மதிப்பதில்லை என்றுதான் அர்த்தம். இந்து மத அடையாளம் என்று நீங்கள் நினைப்பது இப்படிப்பட்ட வெறித்தனமான பேச்சைத் தானா என்பதுதான் எங்களுடைய கேள்வி.

**தமிழிசை:** வெறித்தனம், மத நஞ்சு என்பதையெல்லாம் நான் ஒப்புக்கொள்ள மாட்டேன். இந்து மதம் பற்றிப் பேசினால் மதவாதம்... மற்ற மதங்களைப் பற்றிப் பேசினால் மதச்சார்பின்மை என்ற விசித்திரமான போக்கு இங்கு இருக்கிறது. பெண்கள், குறிப்பாக முஸ்லிம் பெண்கள் மீது அக்கறை மற்றும் மரியாதை கொண்டவர் மோடி. அப்படிப்பட்ட பெண்கள் இயற்கை உபாதைகளுக்குச் செல்வதில் உள்ள பிரச்னைகள் குறித்து ஆதங்கத்துடன் மோடி பேசுவதில் என்ன தவறு இருக்கிறது?

**அருள்மொழி:** மேடையில் இருக்கும் செக்யூலரிசம் பேசும் நபரைத் தாக்க வேண்டும் என்பதற்காக, அந்தப் பாவப்பட்ட பர்தா போட்ட இஸ்லாமியப் பெண்களை ஏன் கேவலப்படுத்த வேண்டும்? இது எந்த வகையில் பண்பாடான பேச்சு? இப்படிப் பெண்களைக் கேவலமாகப் பேசுவது மோடிக்கு இது முதல் முறையல்ல... தன்னுடைய மாநிலத்தின் அகதி முகாம்களில் வசிக்கும் பெண்களைப் பார்த்து, "அவங்களுக்கென்ன... முகாம்ல இனப்பெருக்கம் செய்துக்கிட்டு இருக்காங்க..." என்று பேசினார்... இவரை எப்படி நீங்கள் பெண்களை மதிப்பவர் என்கிறீர்கள்...?

**தமிழிசை:** அப்படி எல்லாம் மோடி பேசவே இல்லை. குஜராத்தில், மோடி 'கா' என்று பேசினால் அது 'காக்கா' என்று திரிக்கப்பட்டு செய்தியாக வந்துவிடுகிறது. அதற்குக் காரணம் மோடி எது பேசினாலும் தவறு என்ற மனப்பான்மை இங்கு பலருக்கும் உள்ளது. அதன் காரணமாகத்தான் மோடியின், இஸ்லாமியப் பெண்கள் பற்றிய கவலைகளைக்கூட இப்படித் திரித்துப் பேசுகிறார்கள். எழுதுகிறார்கள்...

**அருள்மொழி:** உங்களை ஒரு கேள்வி கேட்கிறேன்... மார்வாடிகள் இங்கு வந்து தங்கிக்கொண்டு 'குஜராதி மண்டலி' என்று வைத்துக்கொண்டு, நமக்கு வீடு தர மறுக்கிறார்கள். நீயும் இந்து... நானும் இந்துன்னு பேசறது என்னோட வீட்டைக் கொள்ளையடிக்கத்தானா... அதற்காக தமிழகத்தில் இருப்பவர்கள் மார்வாடிப் பெண்களைப் பார்த்து, 'நீங்கள் முகத்தைத் தான் மூடுகிறீர்கள்... உடம்பை மூடுவதில்லை..' என்று ஏசுவது அநாகரிகம்தானே... அதைப்போலவே இஸ்லாமியர்களைத் தாக்குவதாக நினைத்துக் கொண்டு, அந்தப் பெண்களை இழிவுபடுத்தக் கூடாது. கழிப்பிடப் பிரச்னை என்பது எல்லோருக்கும் ஒன்றுதான் என்பதை நீங்கள் ஒப்புக் கொள்கிறீர்கள் இல்லையா...

**தமிழிசை:** நானும் மோடியும் அதை ஒப்புக் கொள்கிறோம்... அதை உணர்ந்ததால்தான் 20 ஆண்டு காங்கிரஸ் ஆட்சிக் காலத்தில் வெறும் 97,000 கழிப்பிடங்கள் மட்டுமே இருந்த குஜராத்தில்,

• அருள்மொழி



**"மோடியின் ரத்தத்தில் மதநஞ்சு உள்ளது!"**

மோடி 20 மாதத்தில் 67,000 கழிப்பிடங்களைக் கட்டியுள்ளார். இன்னும் பெண்கள், குழந்தைகள் படிக்கும் பள்ளிக் கூடங்களில் நூறு சதவிகித கழிப்பிட வசதிகளை ஏற்படுத்தித் தர முடிவெடுத்துச் செயல்படுகிறார் மோடி.

**அருள்மொழி:** இந்த இடத்தில் எனக்கொரு சந்தேகம் எழுகிறது. 67000 கழிப்பறைகளையும் இந்துப் பெண்கள் தான் பயன்படுத்துகிறார்கள்... முஸ்லிம் பெண்கள் யாரும் பயன்படுத்துவதில்லை என்று ஏதும் கூறியிருக்கிறாரா என்ற கேள்வி தான். அப்படிச் சொல்லவில்லை என்றால் உண்மையிலேயே மகிழ்ச்சி எங்களுக்கு...

**தமிழிசை:** மோடி பேச்சின் சாரம்சம் என்னவென்றால், "வோட்டுக்காக முஸ்லிம்களை ஆதரிக்கும் போலி மதச்சார்பின்மையாளர்களே... அவர்களுடைய வாக்கு வங்கியை மட்டும் பார்க்காமல் அவர்களுடைய உள்ளார்ந்த பிரச்னைகளையும் கவனியுங்கள்'' என்பதுதான். இப்படி நல்லெண்ணத்துடன் கூறுவதைக் கூட ஏன் திரிக்கிறீர்கள்?

**அருள்மொழி:** மோடிக்கு பெண்கள் மீது எவ்வித நல்லெண்ணமும் இல்லை என்பதற்கு அகதி முகாம்களில் இருக்கும் பெண்களைப் பற்றிய கேவலமான பேச்சு ஒரு மிகப்பெரிய உதாரணம். அவர் தீவிர மதஅரசியலால் வளர்க்கப்பட்டவர். அவருடைய மனதில் இன்னும் காலம் போகப் போக மரம் உறுதியாவது போல மத உணர்வு மேலும் மேலும் உறுதிப்படும். இதனால் தற்போது மாற்றுமதப் பெண்கள் மீது ஆதிக்க உணர்வைச் செலுத்துபவர்கள், வருங்காலத்தில் தங்கள் மதத்தின் பெண்கள் மீதும் செலுத்துவார்கள் என்பதுதான் எங்களுடைய அச்சம்.

**தமிழிசை:** மோடி இந்துத்வா பேசுகிறார் என்று சொல்கிறீர்களே... 1989-ல் மிசோரமில் ராஜீவ் காந்தி அவர்கள், 'எங்களுக்கு வாய்ப்புக் கொடுத்தால் நாங்கள் பைபிளில் சொன்னபடி ஆட்சி நடத்துவோம்' என்றார். ஆக, மோடி மட்டும்தான் மதவாதியா? ராஜீவும் காங்கிரஸும் மதவாதிகள் இல்லையா?

**"மோடி மட்டும்தான் மதவாதியா? ராஜீவும் காங்கிரஸும் இல்லையா?"**



• தமிழிசை

இந்த விஷயத்தில் இன்னொரு மிக முக்கியமான பிரச்னை ஒன்றும் இருக்கிறது. அதாவது பெண்கள் கழிப்பிட வசதி இல்லாத காரணத்தால் குறைவாகவே சாப்பிடக்கூடிய நிலைமை பல பகுதிகளில் உள்ளது. விளக்குகள் அணையும் வரை பெண்கள் இயற்கை உபாதைகளுக்காகக் காத்திருக்க வேண்டிய நிலை கிராமப்புற பெண்களுக்கு உள்ளது. கழிவுகளை வயிற்றுக்குள்ளேயே அடக்கி வைப்பதால் பல நோய்கள் வரக் காரணமாகிறது. இதையெல்லாம் உணர்ந்துதான் மோடி பேசினாரே தவிர, வேறெந்த நோக்கமும் அல்ல.

**அருள்மொழி:** தண்ணீர்ப் பிரச்னை காரணமாக பெண்கள் நெடுந்தூரம் சென்று தண்ணீர் எடுத்துவர வேண்டிய நிலை இருக்கிறது. அப்படிக் கொண்டு வரும் சொற்ப அளவிலான தண்ணீர்தான் குடும்பத்தில் உள்ள அனைவருடைய அனைத்துத் தேவைகளுக்கும்... இப்படிப்பட்ட சூழ்நிலையில் அனைத்துப் பெண்களையும் - ஒட்டுமொத்தமாக, மதச்சார்பற்ற முறையில் பார்த்து அவர்களுக்குத் தேவையானவற்றைச் செய்துதர வேண்டும் என்ற அர்த்தத்தில் மோடி பேசுவதுதான் முறையான பண்பாடு. அப்படிப் பேசவில்லை என்பது தான் நிதர்சனம்... (இருவரும் தங்களுடைய கருத்தில் தொடர்ந்து உறுதிகாட்ட, பரஸ்பர கைகுலுக்கலுடன் விவாதம் முடிகிறது)

தொகுப்பு : **இரா. முத்துக்குமார்**

படங்கள் : **ஸ்ரீஹரி**

# "India lives i

Mahatm

# Bank of In
# Using technolog
(Provision of Urban A

**Bank of India and HP: Making cutting-edge technology and**

Bank of India, in partnership with HP, has embarked on a mission of change, p
Bank of India's international network, more branches like this will soon bring t

- Mobile ATMs
- Internet Banking and delivery channels
- Information kiosks to give commodity rates on an online basis
- Connectivity with more than 1200 branches enabling remittances to 17,00
- Hybrid e-enabled credit and debit cards to farmers and artisans

That's not all. HP's technology solutions has made sure that Bank of India will c
accounts, bankers empowered with hand-held computers who will take bankin
rural India will be on the same footing as its urban counterpart.

Commemorating the opening of Sivaganga Branch and Mobile ATM by Mr.



बैंक ऑफ़ इंडिया
Bank of India

# its villages."

Gandhi

# a and HP:
# to enable PURA
## nities in Rural Areas)

d-class banking possible, even in rural India.

l by technology. And the branch at Sivaganga is just the latest. A part of
ndia the latest in banking, including:

branches (RTGS)

people of rural India facilities such as local language based statement of
doorsteps of the people, and a lot more. So that when it comes to banking,

ambaram, Hon'ble Finance Minister, Govt. of India.






# கடலை போடும் காதல்!

நம்மூர்ல இருக்கிற ஒவ்வொரு காதல் ஸ்பாட்டுகளையும் விசிட் பண்ணிட்டு வர்றது ஒண்ணும் அவ்வளவு லேசுபட்ட விஷயமில்லப்பு. லவ் ஸ்பாட்டுங்க ஏதோ விரல்விட்டு எண்ற மாதிரி இருக்கும்னு நினைச்சு ஃபீல்டுல இறங்கினா... அடேயப்பா... மெரீனா பீச்சு, பெசன்ட் நகர் எலியட்ஸ் பீச்சு, வள்ளுவர் கோட்டம், அஷ்டலட்சுமி கோயிலு, ஈ.சி.ஆர். ரோடு, மாயாஜாலு, அண்ணாநகர் டவர் பார்க்னு ஏகப்பட்டது இருக்கப்பு. இதெல்லாம் பத்தாதுன்னு அம்மா சமீபத்துல எக்கச்சக்கமா பார்க்குகளை வேற தொறந்து வச்சுட்டாங்க. சரி... முடியறதப் பார்த்துடலாம்னு கிளம்பினேன்.

முதல்ல போனது பெசன்ட் நகரு எலியட்ஸ் பீச்சுக்குத்தான். அட... அட... அட... கலர் கலர் பலூனு, சிலுசிலுன்னு காத்து... சூடா சுண்டலுன்னு லவ்வர்ஸ் ராஜ்யம் கொடிகட்டிப் பறக்குது. ஒவ்வொருத்தரையும் கிராஸ் பண்ணிப் போறப்ப, அவங்க பாக்குற பார்வையில அப்படியே நான் பஸ்பமாயிடப் பார்த்தேன். அம்புட்டு ஹீட்டு அவங்க கண்கள்ல. ஒரு வழியா அவங்ககிட்ட இருந்து எஸ்கேப் ஆகி நேரா ஈ.சி.ஆர். ரோட்டுக்கு வண்டியை விட்டேன்.

ரோட்டுல போற ஜோடிங்களோட முகத்தைப் பார்க்கறதுக்கு தனி ஞானக்கண்ணே வேணும்ப்பு. எப்பவும் துப்பட்டாவைக் கழுத்துல போடற பொண்ணுங்க, அங்கன மட்டும் முகத்துலயும், தலையிலயும் போட்டுக்கிட்டுப் போகுதுங்க. பையன்ங்க ஹெல்மெட்டோட டாப் கியர்ல போயிட்டிருக்காய்ங்க. வண்டி போற வேகத்தைப் பார்த்தா ஒண்ணு மாயாஜாலு, இல்லன்னா மகாபலிபுரம்னு மனசுல நினைச்சுக்கிட்டே அங்கிருந்து கிளம்பி நேரா மெரீனாவுக்கு வந்தேன்.

நம்மால பீச் மணல்ல கொஞ்ச தூரங்கூட நடக்க முடியல. மணல்ல காலைப் புதைச்சுப் புதைச்சு நடக்கறதால கால் வலிக்குது. ஆனா இந்த ஜோடிங்களால மட்டும் எப்படித்தான் எவ்னோ தூரம் வேணும்னாலும் கையைக் கோத்துக்கிட்டு நடக்க முடியுதோ... ஒரு ஜோடியை ஃபோகஸ் பண்ணி போட்டோ பிடிக்கலாம்னு பார்த்தா, அவிங்க ரெண்டு பேரும் போறாங்க.. போறாங்க... போய்க்கிட்டே இருக்காய்ங்க. சரி... இது வேலைக்கு ஆவாதுன்னுட்டு நேரா கிளம்பி வள்ளுவர் கோட்டத்துக்கு



• 'முகத்த திருப்பு... போட்டோகிராபர் போயிட்டாரு!'

வந்து கொஞ்ச நேரம் ரெஸ்ட் எடுத்தேன்.

இங்க மூலைமூலைக்கு காதல் பட்சிங்க தாம்பு. மத்த ஸ்பாட்டுகள்லயாவது ஓரளவுக்கு ஜெனியூனான ஜோடிங்க வருது. ஆனா இங்க ரொம்ப மோசமாத்தான் இருக்குதப்பு. நம்மளை கவனிக்கறாங்கன்னு தெரிஞ்சாலே அப்படியே முகத்தை மூடிக்கிட்டு ஜூட் விட்டுடுதுங்க. ரொம்ப நேரம் கழிச்சு ஒரு டீசண்டான ஜோடி கண்ணுல மாட்டுச்சு. மெதுவா அவங்க கிட்ட போய் பேச்சுக் கொடுத்தேன். "நாங்க ரெண்டு பேரும் ஒரே சாஃப்ட்வேர் கம்பெனில ஒர்க் பண்றோம். நாங்க ஃப்ரண்ட்ஸ்... வேற எதுவும் கேட்காதீங்க"ன்னு சொல்லிட்டு எஸ்கேப் ஆயிடுவாங்கன்னு பார்த்தா, திரும்ப சின்சியரா பேச ஆரம்பிச்சிட்டாய்ங்க. நானும் வள்ளுவருக்கு ஒரு 'வணக்கம்' போட்டுட்டு நேரா காந்திஜியைப் பார்க்க மண்டபத்துக்குக் கிளம்பினேன்.


• 'எங்கே செல்லும் இந்தப் பாதை!'

இந்த இடம் ஒரு சீரியல் செட்டு மாதிரி. காந்தி மண்டபம், ராஜாஜி மண்டபம், காமராஜ் நினைவகம், சில்ரன்ஸ் பார்க்குன்னு அங்க ஆரம்பிச்சு தொடர்ச்சியா எல்லாத்தையும் பொடி நடையாவே பார்த்துட்டு வந்துரலாம். எல்லா ஸ்பாட்லயும் டீ, கடலை, சுண்டல், சகிதம் காதல் கலாட்டா கலகலப்பா போயிட்டிருக்கு. இங்க மண் புதர்கள் நிறைய இருக்குப்பு. சீக்கிரமா 'புதர் ஒழிப்பு


• 'கிளம்பிட்டாங்கய்யா கிளம்பிட்டாங்க!'

வாரியம்' ஒண்ணு கொண்டு வரலைன்னா நிலவரம் ரொம்பக் கலவரமாயிருமப்பு. சொல்லிப்புட்டேன்.

காந்தி மண்டபத்துல உட்கார்ந்து கடலை போட்டுக்கிட்டிருந்த ஒரு ஜோடி பேசுன டயலாக் ஒண்ணு நம்ம காதுல (அதுவா வந்து!) விழுந்துச்சு.

"சீக்கிரமா டூவீலர் வாங்குடா..."

"அய்யய்யோ.. டூவீலர்ல சுத்தற அளவுக்கு நான் ஒண்ணும் பில்கேட்ஸ் பரம்பரை இல்லம்மா..."

"டேய் லூசு. நான் ஒண்ணும் எனக்காக கேட்கல. உன்னோட செல்லம் பஸ்ல நெருக்கி, இடுக்கிப் போனா நீ மனசு ஒடிஞ்சுடுவேல்ல... அதுக்காகத்தான் சொல்றேன்...."

படங்கள் : ஸ்ரீஹரி

உயிர்க்கொல்லி நோய் என்ற பட்டியலில் இருந்து வெளியேற்றப்பட்டிருக்கிறது புற்றுநோய். 'கிரேடு-1, கிரேடு-2 என அழைக்கப்படும் ஆரம்பக்கட்டத்திலேயே புற்றுநோய் கண்டறியப்பட்டால், குணப்படுத்தி விடலாம்' என்று அறிவித்திருக்கிறது 'கேன்சர் இன்ஸ்டிடியூட்'. உடலின் எந்தப் பாகத்திலும் புற்றுநோய் தோன்றலாம் என்ற நிலையில், அதைக் கண்டறியும் முறையிலும், குணப்படுத்தும் முறையிலும் ஏற்பட்டுள்ள முன்னேற்றங்கள் குறித்து நம்மிடம் பேசினார், சென்னை குரோம்பேட்டை காமாட்சி மருத்துவமனையின் நிறுவனர் டாக்டர் கோவிந்தராஜ்.

"தொடர்ந்து தலைவலி வந்தால் கூட மூளைக் கட்டியாக இருக்குமோ என்று சந்தேகப்பட்டு உடனே பரிசோதனைக்கு வந்து விடும் அளவுக்கு மக்கள் இன்றைக்கு விழிப்புணர்வோடு இருக்கிறார்கள். எனினும் புற்றுநோய்க்கான பல அறிகுறிகள் மற்ற சாதாரண நோய்களுக்கான அறிகுறிகள் போலவே இருப்பதால் அலட்சியமாக இருந்து விட வாய்ப்பிருக்கிறது. தீராத இருமல், சளியில் ரத்தம், வாந்தியில் ரத்தம், சிறுநீரில் ரத்தம், ஆசனவாயில் ரத்தம், வேறு எந்த வகையிலாவது ரத்தம் வந்தால் புற்றுநோயாக இருக்கலாம். பெண்களுக்கு மாதவிலக்கு இல்லாத காலத்தில் கூட ரத்தப்போக்கு, தாம்பத்ய தருணத்தில் ரத்தப்போக்கு போன்றவை செர்விக்ஸ் கேன்சரின் அறிகுறிகள் எனக் கொள்ளலாம். மெனோபாஸ் தருவாயில் இரண்டு மூன்று வருடங்கள் விலக்கு நின்றுபோய் திடீரென்று ரத்தம் வந்தால்

# டேஞ்ஜரில்லை கேன்சர்!


• டாக்டர் கோவிந்தராஜ்

கருப்பை புற்றுநோயாக இருக்கலாம். பெண்களுக்கு மார்பகத் துவாரங்களில் இருந்து சீழ் வந்தால் அதுவும் புற்றுநோய் அறிகுறியே. இவை தவிர, உடலின் எந்தப் பாகத்திலும் தீராத வலி நீடித்தாலோ, உடல் பாகத்தில் புதிதாகக் கட்டிகள், மச்சங்கள் மற்றும் பருக்கள் தோன்றினாலோ புற்றுநோயின் ஆரம்பக்கட்ட அறிகுறிகளாகக் கொள்ளலாம்.

சரி, சந்தேகம் கொள்ளும்படியான அறிகுறிகள் தென்படும் போது, எப்படிக் கண்டறிவது? அல்ட்ரா சவுண்ட் பரிசோதனையில் தொடங்கி, நியூக்ளியர் ஸ்கேன் வரை பல புதிய பரிசோதனை முறைகள் வந்துவிட்டன. அல்ட்ரா சவுண்ட் சோதனை மூலம் ஈரல், வயிறு, பெருங்குடல், கணையம், மார்பகம், சிறுநீரகம், கருப்பை புற்றுநோய்களைக் கண்டறிய முடியும். கருப்பை வாயில் ஏற்படும் புற்றுநோயை, அதன் ஆரம்பக் கட்டத்திலேயே கண்டறிய, கருப்பை வாயின் திசுக்களை துளியளவு சுரண்டியெடுத்து பரிசோதிக்கப்படும் பாப் ஸ்மியர் முறை (Pap smear Method), அல்ட்ரா சவுண்ட் போல



மிகவும் குறைந்த கட்டணத்தில் செய்துகொள்ளக் கூடியது. மார்பகப் புற்றுநோயின் ஆரம்ப நிலையில் ஒரு சிறு கட்டி தோன்றினால்கூட அதை கைகளில் தடவிப் பார்த்து அறியும் சுய பரிசோதனை முறை மிகவும் நம்பகமானது. இதற்கு இணையாக இப்போது மேமோகிராம் வந்துவிட்டது.

சி.டி. ஸ்கேன், எம்.ஆர்.ஐ. ஸ்கேன் போன்றவை மூலம் மூளை மற்றும் தண்டுவடத்தில் தோன்றும் கேன்சர் கட்டிகளைத் துல்லியமாக அறிய முடியும். மேலும் எலும்பில் தோன்றும் புற்றுநோயையும் இதே பரிசோதனையின் மூலம் கண்டுபிடிக்கலாம். நியூக்ளியர் ஸ்கேன் மூலம் மிகவும் ஆரம்ப நிலையிலேயே இவ்வகை கேன்சரைக் கண்டுபிடிக்கலாம். இரத்தப் புற்றுநோயை, இரத்தப் பரிசோதனை மற்றும் போன் மேரோ பரிசோதனை ஆகியவற்றின் மூலம் துல்லியமாக அறிய முடியும். பரிசோதனை முறைகள் பெருகியதால் இன்று கிரேடு - I என்ற ஆரம்ப நிலையிலேயே கேன்சரைக் கண்டறிகிறோம்.

பத்து வருடங்களுக்கு முன்புவரை ஆபரேஷன் செய்து கேன்சரை அகற்றினால் திரும்பவும் வந்துவிடும் என்ற நிலையே இருந்தது. ஆனால் இன்று அறுவை சிகிச்சை மூலம் கேன்சரை முழுவதும் குணப்படுத்தும் நிலை ஏற்பட்டிருக்கிறது. இதற்கு முக்கிய காரணம், புற்றுநோய் அறுவை சிகிச்சை தொடர்பான முதுகலை பட்டப்படிப்பு (MCH) சர்ஜிகல் ஆன்காலஜி நிபுணர்கள் பெருகி வருவதுதான். மேலும் ரேடியேஷன் ஆன்காலஜி துறை அடுத்தடுத்த படி நிலைகளை நோக்கி முன்னேறியபடி இருக்கிறது. கதிர்வீச்சு சிகிச்சையில் கோபல்ட் முறை மிகவும் பழமையானது. ஆனால் இன்று மிகக் குறைந்த பின் விளைவுகளோடு நடைமுறைக்கு வந்துவிட்ட லீனாக் (Lenac) கதிர்வீச்சு முறைக்கு பெரிய வரவேற்பு கிடைத்திருக்கிறது.

உறுப்புகளில் ஏற்படும் கேன்சரை ஆரம்பத்திலேயே கண்டறிந்துவிட்டால், உறுப்புகளின் உள்ளேயே கதிர்வீச்சு சிகிச்சை தரும் எச்.டி.ஆர் பிராக்கி தெரபி (HDR Bracky Theraphy) மூலம் பூரணமாகக் குணப்படுத்த முடியும். இம்முறையில் கட்டணம் மட்டுமல்ல, சிகிச்சை நேரமும் குறைவு.

நோய் எந்தக் கட்டத்தில் இருக்கிறது என்பதைப் பொறுத்து, அறுவை சிகிச்சை, மருந்துகள், கதிர்வீச்சு சிகிச்சை என்று கூட்டு முறையில் சிகிச்சை வழங்கினால் கேன்சரிலிருந்து முழுமையான விடுதலை பெற முடியும். இத்தகைய நவீன பரிசோதனை வசதிகள், சிகிச்சை வசதிகள் ஒருங்கே ஒரே கூரையின் கீழ் அமைந்த பல மருத்துவமனைகள் சென்னையில் இருக்கின்றன. அவற்றில் எங்கள் மருத்துவமனையும் ஒன்று. எனவே கேன்சரை இனி டேஞ்சராகக் கருத வேண்டாம்" என்று குறிப்பிடும் டாக்டர் கோவிந்தராஜ், "புற்றுநோய்க்கு வைத்தியம் பார்ப்பதைவிட அதை ஆரம்பத்திலேயே கண்டறிந்து அகற்றுவதே சிறந்தது" என்கிறார்.

- ஸ்ரீ சக்கரம்

# காதல் கட்டளை!

"நீ என்னைக் காதலிக்கிறியா பிரசாத்?"

பீச் மணலை கையால் அளைந்தபடி ரேவதி, நேருக்கு நேராய் பிரசாத்தின் கண்களைப் பார்த்துக் கேட்டாள்.

திகைத்துப் போனான், பிரசாத். அந்தத் திகைப்பு அவன் கண்களிலும், முகத்திலும் பிரதிபலித்தது.

"அ... ஆமாம்..." என்று ஒற்றைச் சொல் உதிர்ப்பதற்குள் திணறிப் போனான்.

"அதைச் சொல்ல ஏன் தடுமாற்றம்?" என்று அடுத்த கேள்வி வீசினாள்.

"நான் எதிர்பார்க்கலே... 'இப்ப மணி எத்தனை'னு கேட்கறதுபோல



சட்டுனு கேட்டுட்டே..."

"வேற எப்படி... எதிர்பார்த்தியாம்..."

"அதை எப்படி புரியவைக்கறதுன்னு தெரியலை... அது ஒரு பொழுது விடியறது போல... நிதானமாய், பூ மலர்வது போல... மென்மையாய், தென்றல் வீசுவதுபோல... இதமாய்..."

"உவமைகள், உவமேயங்களை ஒதுக்கிவை. ஆகக் கடைசியில் நீ சொல்ல வந்தது ஐ லவ் யூ. கால விரயம் வேண்டாமே என்று நான் நேராக விஷயத்துக்கு வந்துட்டேன். ஓ.கே. இப்ப நான் என்ன சொல்லணும்னு எதிர்பார்க்கற...?"

"உன் மனசுல என்ன இருக்கோ அதைச் சொல்லு..."

"ஆயிரம் இருக்கு! 'யெஸ்'னு சொன்னால் என்ன பண்ணுவே, 'நோ'னு சொன்னால் என்ன பண்ணுவே..."

"நீ 'யெஸ்' சொல்லணும்னுதான் நான் எதிர்பார்க்கறேன்..."

"அப்படிச் சொல்லணும்னுதான் நானும் ஆசைப்படறேன். ஆனால்..."

நிறுத்தி, அவன் முகத்தை ஏறிட்டுப் பார்த்தாள்.

"தடையாயிருக்கறது எதுன்னு சொல்லு ரேவதி, நான் தகர்க்கிறேன்."

"அபத்தமான வாக்குறுதி. வானத்தை வில்லா வளைச்சு, மணலைக் கயிறா திரிச்சு, ஏழு கடல், ஏழு மலை தாண்டி... எட்செட்ரா, எட்செட்ரா... மாதிரியெல்லாம் இல்லை... ஆனால் சில கட்டளைகள் உண்டு..."

"....."

"ஒண்ணு.... 'உங்கள் மகளை காதலிக்க விரும்பறேன்'னு நேரடியாகவோ, மறைமுகமாகவோ என் பேரண்ட்ஸுக்கு இன்ஃபார்ம் பண்ணணும். அதுபோலவே உங்க பெற்றோர்க்கும் சொல்லிடணும்.

ரெண்டு, காதல் வளர்க்கறேன்னு கண்ட நேரத்தில் பீச்,



பார்க், சினிமான்னு கூப்பிடக் கூடாது. என் வேலைக்கோ, உன் வேலைக்கோ பாதிப்பில்லாமல் விடுமுறை நாட்களில் உலா போகலாம்.

மூணு, என்னோடு பழக ஆரம்பிச்சதும்... ஐ மீன் காதலிக்க ஆரம்பிச்சதும், இன்னும் கொஞ்சம் யோசிச்சு வேற அழகான பெண்ணைத் தேர்வு பண்ணியிருக்கலாமோன்னு ஒரு எண்ணம் எப்போதாவது வந்தால் உடனே தெரிவிச்சிடணும். மறுபரிசிலனை செய்யலாம். தேவைப்பட்டால் பிரியலாம். ஆனால், கல்யாணத்துக்கு பின் டைவர்ஸ் பண்ணும் போது ஒரு தொகை செட்டில் பண்றதுபோல, காதல் வளையத்துலருந்து கழற்றிவிடும்போது ஒரு அமௌண்ட் கொடுக்கணும்! அட்வான்ஸா எம்பேர்ல ஒரு ஐந்து லட்சம் பேங்க்ல போடணும்...

நாலு, மேற்படி விவகாரங்களை டாக்குமெண்ட் எழுதி பதிவு பண்ணணும். அஞ்சு..."

"ஸ்டாப் இட்..." என்று கத்தினான் பிரசாத்.

"பேரம் பேசி, ஒப்பந்தம் போட்டுக்கிட்டு பண்றதுக்கு காதல் வியாபாரம்னு நினைச்சியா, மரமண்டை. நீ பொண்ணா... உனக்கு மனசு, கனவு, கற்பனை... ஒரு மண்ணாங்கட்டியும் இல்லை... ரசனையில்லை... ஷிட்... உன்னை நினைச்சேனே... என்னைச் சொல்லணும்.."

வாங்கிய சுண்டலை கோபத்தில் தூக்கியெறிந்தான்.

ரேவதி, அவனை அனுதாபத்தோடு பார்த்தாள்.

"என்ன பண்றது பிரசாத்... காதல்ங்கற பேர்ல என் அக்கா வாழ்க்கை நாசமானதால், நான் முன்ஜாக்கிரதையா இருக்க வேண்டியிருக்கு! என் மென்மையான உணர்ச்சிகள் அவள் கொடுமையான முடிவினால் இறுக்கமாயிடுச்சு. காதல்ங்கிற வார்த்தையைக் கேட்டாலே எனக்கு இப் படித்தான் பதில் சொல்லத் தோணுது... என்ன செய்வேன்... பிரசாத் என்ன செய்வேன்..." என்று கலங்கிய ரேவதியை, அந்த நொடியில் முழுதாய் உணர்ந்தவனாக... ஆறுதலாகப் பார்த்து, நம்பிக்கையாய் புன்னகைத்து...

"ஆல்ரைட்... நாளைக்கு உன் பேரண்ட்ஸை பார்க்க வர்றேன்..." என்றான்.

ரேவதி சந்தோஷமாக இன்னொரு பொட்டலம் சுண்டல் வாங்கினாள். ○



பருதலம் சுகுமாரன்

'எப்போது வேண்டுமானாலும் கூப்பிடுங்கள். அது நள்ளிரவு பன்னிரண்டு மணி என்றாலும் புறப்பட்டு வருகிறோம். பதினெட்டு மணி நேரம் வேலை செய்ய வேண்டுமா.. பின் வாங்கமாட்டோம்.'-இப்படிச் சொல்கிற இளைஞர்கள் எங்கோ தூரதேசத்தைச் சேர்ந்தவர்கள் அல்ல. எடுத்த எடுப்பிலேயே இருபதாயிரம், முப்பதாயிரம் ஊதியம் கிடைக்கிறது எனும் ஒரே காரணத்துக்காக, 'எங்களை எவ்வளவு வேண்டுமானாலும் வருத்திக் கொள்வோம்' என்று சொல்லும் இந்தியர்கள். தேசத்தில் நிகழ்ந்து கொண்டிருக்கும் தகவல் தொழில் நுட்பப் புரட்சியின் இந்த விளைவைத் தவறென்று சொல்ல முடியாது. அதேநேரம் நமது சமூகத்தின் முன்னேற்றத்துக்காகவும், அரசியல் மாற்றத்துக்காகவும் நாங்கள் என்ன வேண்டுமானாலும் செய்வோம் என்று சொல்லும் தலைமுறையும் வரவேண்டும். இந்தத் தலைமுறை சுழற்சி நிகழாவிட்டால் சமூகத்தில் மனிதநேயம் என்பதும் மாற்றம் என்பதும் கனவாகி விடும்'' என்று பேச ஆரம்பித்த

# கபிலன் வைரமுத்து



இருபத்து மூன்று வயது கபிலன், ஒரு சாஃப்ட்வேர் இன்ஜினியர். இளைஞர்கள் அரசியலுக்கு வர வேண்டும் என்ற பம்மாத்து கோஷத்தை ஒதுக்கி விட்டு, இளைஞர்களிடமிருந்து ஓர் அரசியல் வரவேண்டும் எனும் நோக்கத்தோடு இளைஞர் சமுதாய முன்னேற்ற சங்கத்தைத் தொடங்கி அதை இயக்கிக் கொண்டிருப்பவர். கவிப்பேரரசு வைரமுத்து - கவிஞர் பொன்மணி தம்பதியின் வாரிசு.

"கவிதையை எனது லட்சியமாக நான் வரித்துக் கொள்ளவில்லை. மனத்தில் பட்டதை ஒன்பது வயது முதல் கவிதையாக எழுத ஆரம்பித்தேன். எனக்கிருந்தது போன்ற ஓர் இலக்கிய சூழலில், யார் வளர்ந்திருந்தாலும் கவிதை எழுதி இருப்பார்கள். எனக்கு அப்பா தான் முதல் பாதிப்பு. 'மனிதா! மனிதா! இனி உன் விழிகள்

சிவந்தால் உலகம் விடியும்' என்பது போன்ற அவரின் எழுச்சிக் கவிதைகள் பத்து வயதிலேயே எனக்குள் வெளிச்சத்தைப் பாய்ச்சின. குறிப்பாக 'வளர்பிறைத் மாற்றம்' என்ற கவிதை என்னைப் புதிதாக வார்த்தது என்றே சொல்லுவேன். மரபும் புதுமையும் கைகோத்துக் கொண்டிருக்கும் அந்தக் கவிதையில் அப்பாவின் இரண்டு முகங்களைப் பார்த்தேன். 'ஒரு வைரமுத்து மென்மையானவர். மற்றொருவர் மாபெரும் சமூக கோபம் கொண்டவர். அவர் எழப்போகிறார் என்ற தொனியில் அமைந்த அந்தக் கவிதையில் இளைஞர்களின் இன்றைய மனப்பான்மை குறித்த இரண்டு வரிகள்...

'ஆடல் பாடல் கேளிக்கையே - இங்கு
ஆயிரமாயிரம் இளைஞர் நிலை.
தேடல் என்பது சிறிது மிலை - அடி
சிங்கத்தின் மீசையில் சிலந்திவலை'

- இவை என்னை உசுப்பிவிட்டன.

இன்னொரு பக்கம் அம்மா. 'சங்க இலக்கியத்தில் புதுக்கவிதைக் கூறுகள்' என்ற தலைப்பில் முனைவருக்கான ஆராய்ச்சியை மேற்கொண்டார். யாருமே தொடத் தயங்குகிற தலைப்பு. மொத்த சங்க இலக்கியத்தையும் சளைக்காமல் வாசித்து ஆராய்ச்சி செய்த அவரது துணிச்சலும், இலக்கிய ஆராய்ச்சி மனமும், எதையும் ஆழமாகப் பார்க்கும் அறிவை எனக்குக் கற்றுக் கொடுத்தன. அம்மா - அப்பாவின் படைப்புகளில் அடிநாதமாக இருந்து கொண்டேயிருக்கும் சமூகப் பார்வை, எனக்குள் ஒளிந்திருந்த நாட்டுப்பற்றைக் கிளறிவிட்டது என்றுதான் சொல்ல வேண்டும்.

பிறகு நான் பயின்ற கோடம்பாக்கம் லயோ பள்ளி. என்னைப்போல் ஒத்த சிந்தனைகொண்ட மாணவர்கள், அங்கே வழக்கமாகப் போடப்பட்டு வந்த ஆங்கில நாடகங்களில் சலிப்புற்றோம். புதிய நாடகக் குழுவை உருவாக்கினோம். 'நேற்று இன்று நாளை' என்றொரு நாடகம் போட்டோம். நாடகம் முடிந்த கையோடு டீக் கடையில் அமர்ந்து பேசினோம். "டேய்... நாம ஒரு டிராமா போட்டோம். 'இந்தியா இளைஞர்களின் கையில்' என்று முடித்தோம். இளைஞர்கள்னா யாருடா...? நாமதானே! ஏன் நாமே சில நல்ல செயல்களில் இறங்கக்கூடாது என்று சிந்தித்தோம். அது எங்கள் எல்லோருக்குமே புத்துணர்ச்சியைக் கொடுத்தது. ஆனால் ப்ளஸ் ஒன் படிக்கிறபோது நம்மால் என்ன செய்துவிட முடியும் என்ற கேள்வியைக் கேட்டுக் கொண்டோம். ப்ளஸ் டூ முடித்த பிறகு

# அரசியலுக்கு வெளியே ஓர் அரசியல்!

நாம் ஏழு பேரும் ஏழு கல்லூரிகளுக்குச் சென்று அங்கே மாணவர் குழுக்களைத் திரட்டி ஒரு இயக்கம் தொடங்குவதென்று முடிவு செய்து கொண்டோம். இப்படித்தான் இளைஞர் சமுதாய முன்னேற்ற சங்கத்துக்கான விதை விழுந்தது'' என்று சொல்லும் கபிலன், கல்லூரியில் காலடி வைத்த பிறகு சந்தித்த அனுபவங்களை விவரிக்கிறார்.

"ஆயிரம் மாணவர்கள் எடுத்த எடுப்பிலேயே வந்து இணைந்து கொண்டார்கள். 'இந்த இயக்கம் உடனடியாக ஒரு மாற்றத்தை ஏற்படுத்துவதற்கு அல்ல. இதை எப்படியெல்லாம் எடுத்துச் செல்லலாம் என்று முதலில் கற்றுக் கொள்வோம். கொஞ்சம் கொஞ்சமாக முன்னேறுவோம். இலவச வேட்டி சேலை கொடுப்பதற்காக அல்ல நமது இயக்கம். ஒரு சிந்தனையை

வளர்ப்பதற்காகவும்... அதற்குச் செயல் வடிவம் கொடுப்பதற்காகவும்' என்று சொல்லியே தொடங்கினோம். இயக்கத்திற்கு அரசியல் நோக்கம் எதுவுமில்லை என்று ஆரம்பத்தில் சொன்னபோது கல்லூரியில் எங்களுக்கு எந்தப் பிரச்னையும் நெருக்கடியும் இல்லை. தீய வழியில் போய்க் கொண்டிருந்த இளைஞர்களுக்கு முதலில் திசை திருப்புதல் வேண்டும் என்று சின்னச் சின்ன சேவைப் பணிகளைச் செய்ய ஆரம்பித்தோம். கல்லூரி இறுதியாண்டு படிக்கிறபோது நமது இயக்கத்திற்கு



• அறவாணன் தலைமையில் அரசியல் ஆராய்ச்சிக்குழு அறிக்கை வெளியீடு

ஒரு தீர்க்கமான அரசியல் லட்சியம் இருக்கிறது என்று அறிவித்தோம். அவ்வளவு தான்! நூற்றுக்கணக்கான மாணவர்கள் பிரிந்து போய்விட்டார்கள்.

'எத்தனை கஷ்டப்பட்டு மாணவர்களை ஒருங்கிணைத்தோம். இப்படிப் போய்விட்டார்களே' என்ற வருத்தம் சில நாட்கள் வாட்டியது. ஒரு சமூக மாற்றத்துக்காக மாணவர் கூட்டத்தைத் திரட்டிக் கொண்டிருக்கிறோம். கை தட்டுவதற்கு அல்ல. எண்ணிக்கையைவிட நம்பிக்கையே முக்கியம் என்று எண்ணிக் கொண்டு சளைக்காமல் செயல்பாடுகளைத் தொடர்ந்தோம். இன்று சென்னையில் வலுவான அடிப்படை அமைப்பு. சென்னைக்கு வெளியே சேலம், மயிலாடுதுறை, திருச்சி, தஞ்சை என்று இயக்கத்தை வளர்த்துக் கொண்டிருக்கிறோம்" எனும் கபிலன், தம்மை தலைவர் என்று சொல்வதை மறுக்கிறார். "இங்கே தலைவர் இல்லை தலைவர்கள்தான் இருக்கிறார்கள். பிரசாந்த், கணேஷ், தேவநாதன், விஜய், பாஷா ஆகிய துடிப்பான இளைஞர்களை தலைமைக் குழுவாகக் கொண்டு இயக்கம் முன்னெடுத்துச் செல்லப்படுகிறது" என்கிறார். இளைஞர் சமுதாய முன்னேற்ற சங்கம் எதை நோக்கி முன்னேறிக் கொண்டிருக்கிறது?

"எங்கள் இயக்கம் லட்சியத்தினால் அடையாளம் கண்டுகொள்ளப்பட வேண்டும். தனிமனித தலைமையால் அல்ல. நாங்கள் முன் வைப்பது ஒரு புதிய அரசியல். நாங்கள் எதிர்ப்பது அரசியல் கட்சித் தலைவர்களை அல்ல. இன்றைய அரசியல் கலாசாரத்தை. இது ஒரு சராசரி இளைஞனை பயமுறுத்துகிற கலாசாரம். இதை மாற்றிக் காட்ட வேண்டும் என்ற நீண்ட கால லட்சியத்தை நோக்கி நடைபோடுகிறோம். ஒரு புதிய அரசியல் தேவை என்கின்ற விழிப்புணர்ச்சியை ஏற்படுத்துவதற்காக, தமிழக அரசியல் ஆராய்ச்சிக் குழுவை அமைத்திருக்கிறோம். இந்தக் குழு முதலில் நிகழ்கால சமூக அமைப்பு பற்றிய ஒரு சுய கல்வியை மேற்கொள்ளும். அதன் பிறகு அனைத்து துறைகள் பற்றியும் சமூக முன்னேற்ற சிந்தனைகள் வளர்க்கப்படும். அந்தச் சிந்தனைகள் கொள்கைகளாக வடிவமைக்கப்படும். அதன் அடிப்படையில் புதிய கலாசாரத்தின் புதிய அரசியல் கட்சி உருவாக்க வேண்டும் என்ற கனவு இருக்கிறது. இதற்கு காலம் பதில் சொல்லும் என்ற கபிலன் "இளைஞர் சமுதாய முன்னேற்ற சங்கம் என்றைக்குமே ஒரு அரசியல் கட்சியாக மாறாது. ஆனால் ஒரு அரசியல் கட்சியை உருவாக்குவதற்கான முயற்சிகளை மேற்கொள்ளும். இதற்கு தமிழகத்தின் அனைத்து அரசியல் கட்சித் தலைவர்களின் வாழ்த்துகளும் நிச்சயம் இருக்கும்" என்று நம்பும் கபிலன், இம்மாத இறுதியில் தமது நான்காம் கவிதைத் தொகுதியை வெளியிடுகிறார். தொகுப்பின் தலைப்பு : கடவுளோடு பேச்சுவார்த்தை.

தொகுப்பு : **ஆர்.சி.ஜெயந்தன்**

படம் : **ஸ்ரீஹரி**



# ஸ்ரீ ஸர்வாங்க ஸுந்தரீ ஸமேத ஸ்ரீ ஸற்குணேச்வர ஸ்வாமி திருக்கோயில்

## ஸ்ரீ ஸற்குணேச்வரபுரம், கருவேலி-609 501.

✆:04366 273900

### நூதன ஸ்ரீ நடராஜமூர்த்தி ப்ரதிஷ்டை, லட்சார்ச்சனை, ஸ்ரீ ருத்ராபிஷேகம், ஸம்வத்ஸராபிஷேகம் மற்றும் திருக்கல்யாண உற்சவம்

**பார்த்திப வருடம் பங்குனி மாதம் 2 ஆம் தேதி வியாழன் முதல் 5ஆம் தேதி ஞாயிறு முடிய (16.3.2006 - 19.3.2006)**

அன்புடையீர்,

ஸ்ரீ ஸற்குணேச்வரர் கைங்கர்ய ஸபா பல நற்பணிகளை ஆற்றி வருகிறது. இவற்றின் தொடர்ச்சியாக நிகழும் பார்த்திப வருடம் பங்குனி மாதம் 2ஆம் தேதி வியாழன் துவங்கி 5ஆம் தேதி ஞாயிறு முடிய (16.03.2006 - 19.03.2006) **ஸ்ரீ ஸர்வாங்க ஸுந்தரீ உடனுறை ஸ்ரீ ஸற்குணேச்வர பெருமான் திருக்கோயிலில்** ஸ்ரீ நடராஜ மூர்த்தி ப்ரதிஷ்டா வைபவமும், ஸம்வத்ஸராபிஷேகப் பெருவிழாவும் நடைபெற இருக்கின்றன. அது சமயம் உலக நலனை முன்னிட்டு பல விசேஷ ஹோமங்கள், லக்ஷார்ச்சனை, ஸ்ரீ ருத்ராபிஷேகம், திருக்கல்யாண உற்சவம் மற்றும் ஸம்வத்ஸராபிஷேகம் முதலியன நடத்தப்படுகின்றன. இவை சிறப்பாக நடைபெற அனைவரும் தங்களால் இயன்ற ஹோமம், பாராயணம், ஜப, அர்ச்சனைகளுக்கான கட்டணங்களையோ அல்லது நன்கொடைகளையோ ஸபாவின் பெயருக்கு மணியார்டராகவோ, காசோலையாகவோ அல்லது வரைவுக் காசோலையாகவோ அனுப்பக் கோருகிறோம். அல்லது கீழ்கண்ட முகவரியில் யாரிடமாவது செலுத்தலாம்.

ஸ்ரீ சிவ ஸஹஸ்ர நாமத்தினாலும், ஸ்ரீ லலிதா ஸஹஸ்ர நாமத்தினாலும் நடைபெறுகிற லட்சார்ச்சனைகளுக்கு விருப்பப்படுகிறவர்கள், இரண்டுக்குமாக சேர்த்து ரூ.200/- செலுத்தலாம்.

*என்றும் இறைபணியில்*

*Dr. V.* ***கிருஷ்ணமூர்த்தி***
*பரம்பரை அறங்காவலர்*

**ஸ்ரீ ஸற்குணேச்வரர் கைங்கர்ய ஸபா (Regd).**
32/18, டபீர் புதுத்தெரு, கும்பகோணம் - 612 001.
போன்: 0435-2423297 மற்றும் **கிராமவாசிகள்**

**பொன். *சிவசங்கரன்* M.A.** *நிர்வாக அதிகாரி*

| எண் | நிகழ்ச்சி | கட்டணம் |
|---|---|---|
| 1. | ஸ்ரீமஹா கணபதி ஹோமம் | ரூ. 100/- |
| 2. | ஸ்ரீ நவக்ரஹ ஹோமம் | ரூ. 100/- |
| 3. | சிறப்பு சூர்ணாபிஷேகம் (மஞ்சள் பொடி) | ரூ. 100/- |
| 4. | சிறப்பு குஸும நாளிகேராபிஷேகம் (இளநீருடன் குங்குமப்பூ கலந்து) | ரூ. 100/- |
| 5. | சிறப்பு அபிஷேகம் | ரூ. 200/- |
| 6. | ஸ்வாமி, அம்பாள் லட்சார்ச்சனை | ரூ. 200/- |
| 7. | வஸ்த்ரதானம் (ஒரு ரித்விக்கிற்கு)-20 | ரூ. 400/- |
| 8. | அன்னதானம் (ஒருவேளை) | ரூ. 500/- |
| 9. | புஷ்ப கைங்கர்யம் (ஒருவேளை) | ரூ. 500/- |
| 10. | தம்பதி பூஜை (ஒரு தம்பதிக்கு) | ரூ.1000/- |
| 11. | ஸ்ரீருத்ர ஜப, ஹோம ஸங்கல்பம் | ரூ.1000/- |
| 12. | ஸ்வாமி, அம்பாளுக்கு வேஷ்டி, புடவை (9x5-9 கஜம்) | ரூ.1000/- |
| 13. | ஸந்தர்ப்பணை (ஒருநாள்) | ரூ.2500/- |
| 14. | திருக்கல்யாண உற்சவம் | ரூ.2500/- |

**மார்ச் 16, 17, 18 ஆகிய மூன்று நாட்களிலும் மாலை 6.00 மணிக்கு மேல் சிறப்பு சொற்பொழிவுகளும், இன்னிசை நிகழ்ச்சிகளும் நடைபெறுகின்றன.**

குறிப்பு: நிகழ்ச்சிகளில் பங்கு கொள்ள விரும்பும் அன்பர்கள் அவற்றிற்கான கட்டணத்தை **"ஸ்ரீ ஸற்குணேச்வரர் கைங்கர்ய ஸபா"**விற்கு மணியார்டர் அல்லது வரைவுக் காசோலை (D.D) அல்லது பொருளாகவோ அனுப்பலாம். அல்லது கீழே கொடுக்கப்பட்டுள்ள முகவரிகளில் ஏதேனும் ஒன்றிற்கு அனுப்பவும்.

**G. குஞ்சிதபாதம், FCA.,**
டபீர் மேலத்தெரு, கும்பகோணம்–612 001
போன்: 0435 2420047

**V.L. நாராயண சாஸ்திரிகள்,**
25/1 சுப்பாரெட்டித் தெரு,
மேற்கு மாம்பலம், சென்னை - 600 033.
போன்: 044-24897125

**G. கண்ணன்,** D/127-A, ராஜமன்னார் சாலை,
கே.கே.நகர், சென்னை –78.
போன்: 044-24836495

**R. வைத்தியநாதன்,** மேலாளர்,
இந்தியன் ஓவர்சீஸ் வங்கி, பிளாட் நெ. 4,
கதவு எண் 12, 29வது தெரு,
தில்லை கங்கா நகர், நங்கநல்லூர், சென்னை - 600 061. போன்: 044 - 22333361

**குடந்தை - பூந்தோட்டம் நெடுஞ்சாலையில் குடந்தையிலிருந்து 21 கி.மீ. தொலைவில் அமைந்துள்ளது அருள்மிகு ஸற்குணேஸ்வரர் ஆலயம்.**

# முக்கோண காதல்!



* மஹாலட்சுமி

முக்கோண காதல் நமக்குப் புதிதல்ல. தமிழ் சினிமாவில் இந்த அரைத்த மாவை ஆயிரம் முறைக்கும் மேல் பார்த்திருக்கிறோம். ஆனால் ஓவியர் மஹாலட்சுமியின் முக்கோண காதல் புதிது. இதுவரைக்கும் யாரும் முயற்சிக்காதது. சமீபத்தில் இவர் சென்னையில் நடத்திய கண்காட்சியில் வைக்கப்பட்ட அனைத்து ஓவியங்களும் முக்கோண வடிவை மையமாகக் கொண்டு வரையப்பட்டவை.

"கணக்குப் பாடத்தில் ஏதாவது விட்டகுறை தொட்டகுறை இருக்கிறதா? இப்படி முக்கோண வடிவங்களாக வரைந்து தள்ளிவிட்டீர்களே" என்றால், சிரிக்கிறார் மஹாலட்சுமி.

"நான் 1983-ல் அரசு ஓவியக் கல்லூரியில் படிப்பு முடிச்சேன். ஓவியம்ங்கிறது குழந்தை மாதிரிங்க. எப்போ பார்த்தாலும் புத்துணர்ச்சி கொடுக்கும். ஓவியங்கள்ல நிறைய பேர் விதவிதமான முயற்சிகள் பண்ணிப் பார்த்துட்டாங்க. ஆனா முக்கோண ஓவியப் படங்களை யாரும் செய்ததில்லை. முதல்ல சும்மா முயற்சி பண்ணிப் பார்த்தேன். ஓவியத்



துக்கே புது மெருகு கிடைச்ச மாதிரி தோணுச்சு. உடனே களத்துல இறங்கிட்டேன்.

இந்த ஓவியங்கள்ல பல புது முயற்சிகள் எடுத்திருக்கேன். பெண்களின் நகைகளைக்கூட முக்கோண வடிவில் புது டிசைனில் மின்ன வைச்சிருக்கேன். கண்களிலுள்ள கருவளையத்துல படரும் ஒளியையும் கை கால் நகத்தையும் கூட முக்கோணமாக்கியது ரொம்ப சவாலா இருந்தது. ஆயில்






பெயிண்டிங்ல வரைஞ்சதால படம் வரைய சில சமயம் ஒரு மாதம்கூட ஆச்சு. கண்காட்சியில இதைப் பார்க்குற பலரும் விலைக்குக் கேட்கிறாங்க" என்கிற மஹாலட்சுமி, தனியாக வெளிநாடுகளுக்கு ஓவியங்களை ஏற்றுமதி செய்யும் வியாபாரம் செய்து வருகிறார்.

இவரது படங்கள் அனைத்தும் தமிழ்க் கலாசாரத்தை ஒட்டியே உள்ளன. "நம் கலாசாரத்தை ஓவியங்களாகப் பதிவு செய்யும்போது தனி சுகம் கிடைக்குது. என் படங்களைக் காட்டி வெளிநாட்டினருக்கு என் மண்ணின் மகத்துவத்தை எடுத்துச் சொல்ல முடிகிறது. இதனால் என் ஓவியங்களுக்கு செம்படைச்சி, பழக்காரி, மார்கழி, கோமாதா பூஜா... என்று தமிழ் பழக்க வழக்கத்திலுள்ள பெயர்களை வைக்க முடிந்தது" என்கிறார்.



**- செந்தில்**

படங்கள் : **புதூர் சரவணன்**

நெல்லை மாவட்டம் களக்காடு கிராமம். வனங்கள் நிறைந்த பகுதி. ஊருக்கு எதிரே பசுமை போர்த்திய மலைத் தொடர். ஏழு அருவிகள். அபூர்வமான சிங்கவால் குரங்குகள் இந்த வனப் பகுதியில் பிரசித்தம். புலிகள் சரணாலயம் ஒன்றும் அமைந்துள்ளது. சுற்றுலாப் பயணிகளுக்கு சுவையான இடம். இந்த கிராமத்திலிருந்துதான்



# உயிருள்ளவரை...

இந்த வார கல்கி வாசகரைக் கண்டெடுத்தோம். அவர், ராஜாஜிபுரம் பகுதியில் வசித்து வரும் ஹரிஹர சுப்ரமணியன். மனைவி பார்வதி. மூத்த மகள் லெட்சுமிக்குத் திருமணம் ஆகிவிட்டது. மகன் நம்பி நாராயணன், மெக்கானிக்கல் இன்ஜினீயரிங் முடித்துவிட்டு, சென்னை மெஷின் டூல்ஸ் ஆப் இந்தியா நிறுவனத்தில் மார்க்கெட்டிங் பிரிவில் பணிபுரிந்து வருகிறார். களக்காட்டில் தங்கியிருப்பது தம்பதியர் இருவர் மட்டுமே. கல்கி வாசிப்பதில் கணவரைவிட ஆறு வருட சீனியர் பார்வதி. தமது பதினான்காவது வயதிலேயே பெரியப்பா சங்கரநாராயணன் மூலம் கல்கி அறிமுகமாம்.

விவசாயம்தான் ஹரிஹர சுப்ரமணியனுக்கு பூர்விகத் தொழில். நன்செய் வயல், மா, தென்னந்தோப்புகள் இருக்கின்றன. இவர் மிகவும் தோய்ந்திருப்பது ஆன்மிகத்தில். கல்கியில் வெளியாகும் ஆன்மிகத் தகவல்கள் மற்றும் கட்டுரைகளின் ஆன்மநேய வாசகர். விளம்பரங்கள் உட்பட கல்கியில் எந்தவொரு பக்கத்தையும் தவிர்த்துவிட்டு வாசிக்க வேண்டுமென்கிற சூழல் இதுவரை நேர்ந்திடவில்லை என்பதும், ஒவ்வொரு பக்கமும் வாசிப்பு அனுபவத்தில் ஜொலிக்கும் நல்முத்துக்கள் என்பதும் இவரது கருத்தாய் இருக்கிறது. 'முக்கூர் ஸ்ரீலக்ஷ்மி நரசிம்மாச்சார்யார் அருளிய குறையொன்றுமில்லை தொடர், நிகழ்காலம் மட்டுமின்றி எதிர்கால சந்ததியினருக்கும் பயனளிக்கும் விஷயம்' என்கிறார். கையில் எடுத்த ஒரே மூச்சில் கல்கியைப் படித்து முடித்து விடுவாராம்.

பார்வதி இவருக்கு நேரெதிர். ஒருமுறை வாசித்துவிட்டு கல்கியை மறுமுறையும் வாசிக்கும் பழக்கம் கொண்டவர். எல்லோரும் அவரை 'என்ன பரீட்சைக்குப் படிக்கிறாயா?' என்று பல சமயங்களில் கிண்டலடிப்ப



தும் உண்டாம். நல்ல விஷயங்களை திரும்பத் திரும்ப வாசிப்பதில் தவறேதும் இல்லையென்பதால் கற்றுப்புற கிண்டல்கள் அவருக்கு சுமையாகத் தெரியவில்லையாம்.

"இருபது வருடங்களுக்கு முன்பு புற்றுநோய் மருத்துவர் சாந்தா அவர்கள், புற்றுநோய் குறித்துக் கூறிய விவரங்கள் கல்கியில் வெளியானது. அப்போது பத்தை கிராமத்தில் இருந்து முப்பத்தைந்து வயதான ஒரு பெண், எங்கள் வீட்டிற்கு வந்து போவாள். அவளுக்கு மாதவிலக்கின்போது நிகழும் இடையூறுகள் குறித்து ஒரு நாள் என்னிடம் கூறினாள். எனக்கு உடனே மருத்துவர் சாந்தா கட்டுரையின் விஷயங்கள் ஞாபகத்துக்கு வர, உடனே அவளை திருநெல்வேலியில் உள்ள ஒரு பெண் மருத்துவரிடம் போகச் சொன்னேன். அவர் அவளைப் பரிசோதனை செய்துவிட்டு, அவளது கர்ப்பப்பையில் புற்றுநோயின் ஆரம்ப அறிகுறிகள் தோன்றியிருப்பதாகவும், அதற்கு சென்னை சென்று மருத்துவர் சாந்தாவிடம் சிகிச்சை பெற்றுக் கொள்ளவும் சிபாரிசு செய்திருக்கிறார். அவளும் அவரிடம் சென்று சிகிச்சை பெற்று தற்போது நலமாக இருக்கிறாள். இருபது வருடங்களாக, ஆண்டுக்கு ஒருமுறை சென்னை சென்று தன் உடல்நிலையை பரிசோதித்துக் கொள்கிறாள். கல்கி கட்டுரை வாசித்ததால்தான் என்னால் அந்தப் பெண்ணுக்கு வழிகாட்ட முடிந்தது. உயிருள்ளவரை கல்கியை எங்களால் மறக்க முடியாது!" என்கிறார் பார்வதி நெகிழ்ச்சியாக!

**- ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு**

# 12.2.2006 முதல் 18.2.2006 வரை



• படம் : ஸ்ரீஹரி

**மேஷம் :** கூபகாரியம் கைகூடும். வீடு, மனை வாங்க ஏற்ற காலம். கணவன் - மனைவி உறவு நன்கு பலப்படும். மனச்சலனம் தீரும். வாக்குவன்மை மேலோங்கும். எதிர்ப்புகள் குறையும். உத்தியோகத்தில் நல்ல உயர்வும், இட மாற்றமும் ஏற்படும். ஆஞ்சநேயர் வழிபாடு செய்து வருவது நல்லது.

**ரிஷபம்:** எதிலும் கவனமுடன் செயல்படுவது நல்லது. பணகஷ்டம் தீரும். குடும்ப வாழ்வில் விட்டுக் கொடுத்துப் போவது நல்லது. வாக்குவாதம் தவிர்க்கவும். உடல் ஆரோக்கியம் பாதிப்புக் குறையும். நெருங்கிய நண்பர் / உறவினர் விலகிச் செல்வார்கள். கூட்டுத் தொழில் செய்பவர்கள் கூட்டாளிகளுடன் ஒத்துப்போவது நல்லது. வியாபாரிகளுக்குச் சற்று முற்போக்கான சூழ்நிலை தெரியும். குரு / ராகு / கேது வழிபட்டு வருதல் நலம்.

**மிதுனம்:** சிலருக்கு வெளிநாட்டிலிருந்து அழைப்புக் கிட்டும். குடும்ப வாழ்வு நன்றாக இருக்கும். பள்ளி மாணவ / மாணவியர் நற்பலனை அடைவார்கள். வீடு, வாகனம் வாங்கலாம். உடல் ஆரோக்கியம் பாதிப்பைத் தராது. குழந்தை பாக்கியம் கிட்டும். எதிரிகள் தொல்லை இருக்காது. வேலை இல்லாதவர்களுக்கு வேலை கிட்டும். ராகு / கேது வழிபாடு செய்தல் நலம்.

**கடகம்:** கல்வி வளம் பெருகும். உடல்நிலை பாதிப்பு இருக்காது. தெய்வ தரிசனம் ஏற்படும். குடும்ப வாழ்வு நன்றாக இருக்கும். குழந்தைகளால் சந்தோஷம் கிட்டும். தொழில் துறையினர் நற்பலனை அடைவார்கள். உத்தியோகத்தில் வேலை மாற்றம் ரெடி. மகப்பேறு ஏற்படும். சனி / குரு வழிபாடு நற்பலனைத் தரும்.

**சிம்மம்:** எண்ணியவை யாவும் ஈடேறும். தடைகள் விலகி நற்பலனை அளிக்கும். சத்ரு தொல்லை விலகும். பணவரவு ஏற்படும். நீண்ட நாள் இழுத்துக் கொண்டு வந்த காரியங்கள் முடிவுக்கு வரும். கணவன்-மனைவிக்குள் அனுசரணை தேவை. உணவுக் கட்டுப்பாடு அவசியம். யாரி













# நடக்குமென்பார்; நடக்கும்!

தஞ்சை பரத்வாஜ்

டமும் வாக்குவாதம் வேண்டாம். ஊரோடு ஒத்துப்போவது நல்லது. வண்டி வாகனத்தில் செல்லும்போது கவனம் தேவை. திருமணம் கைகூடும். நல்ல வேலை தேடி வரும். உடல் நிலையில் கவனம் தேவை. கூட்டாளிகளால் நன்மை, தீமை கலந்திருக்கும். வியாபாரத்தில் சற்று மந்தமான சூழ்நிலையே இருக்கும். வாரத்தின் பிற்பகுதி நற்பலனை அளிக்கும். ராகு / கேது / சனி / குரு வழிபடுதல் நலம்.

**கன்னி:** குருவும் சனியும் தங்களுக்குச் சாதகமான நிலையில் உள்ளதால் வீடு, தொழில், வாகனம் வாங்க ஏற்ற காலம். கணவன்-மனைவி குடும்ப வாழ்வில் ஒத்துப்போவது நல்லது. குழந்தைகள் வழியில் சந்தோஷம் ஏற்படும். கொடுக்கல்-வாங்கல் நன்றாக இருக்கும். செலவுகள் சுபமானதாக இருக்கும். புதிய தொழில் துவங்க ஏற்ற காலம். உடல் ஆரோக்கியம் நன்றாக இருக்கும். ராகு / கேது வழிபட்டு வருதல் நற்பலனைத் தரும்.

**துலாம்:** வழக்கு வெற்றி பெறும். எண்ணிய யாவும் ஈடேறும். எதிர்ப்பு, தொல்லை விலகும். உடல் நிலையில் சற்று முன்னேற்றம் தெரிய ஆரம்பிக்கும். கொடுக்கல் வாங்கல் நற்பலனை அளிக்கும். கணவன் - மனைவி உறவு நன்றாக இருக்கும். சிலருக்கு வீடு மாற்றம் ஏற்படும். உத்தியோகஸ்தர்களுக்கு வேலைப்பளு அதிகரிக்கும். சிலருக்கு வெளிநாடு செல்ல வாய்ப்பு வரும். கடன் சுமை குறையும். நண்பர்கள் / உறவினர்கள் மூலம் ஆதாயம் ஏற்படும். குழந்தைப்பேறு ஏற்படும். குரு / சனி வழிபட்டு வருதல் நலம் தரும்.

**விருச்சிகம்:** கொடுக்கல் வாங்கலில் சிக்கல் தீரும். உடல் ஆரோக்கியம் நன்றாக இருக்கும். புதிய வாகனம் வாங்க நல்ல நேரம். திருமண காரியம் கைகூடும். நல்ல வேலைவாய்ப்புத் தேடி வரும். செலவுகள் சுபமானதாக இருக்கும். கணவன் - மனைவி உறவு நன்றாக இருக்கும். பத்திரிகைகளில் பெயர் வரும். புதிய தொழில் தொடங்கலாம். மாணவ / மாணவியர் படிப்பில் மேன்மை அடைவார்கள். வெளிநாட்டு மனிதர்களால் அனுகூலம் ஏற்படும். ராகு / கேது வழிபாடு நலம் தரும்.

**தனுசு:** எண்ணிய யாவும் ஈடேறும். அஷ்டமத்து சனியினால் எந்தப் பாதிப்பும் இராது. பொன், பொருள், மனை, பூமி வாங்க நல்ல காலம். வேலையில் இடமாற்



**❑ என் மகன் அடிக்கடி வேலையை மாற்றிக்கொண்டே இருக்கிறான். அவனுக்கு எப்போது நிரந்தர வேலை அமையும்? திருமணம் எப்போது?**

**- எஸ். ராஜலட்சுமி, சென்னை-42**

தங்கள் மகனுக்கு வெளிநாட்டுப் பணி நிரந்தரமாக அமையும். முயற்சி செய்யவும். 2007-ல் திருமணம் கைகூடும். படித்த, வேலையிலுள்ள பெண் அமைவாள். உறவில் பெண் அமையாது.

**❑ என் பெண் மற்றும் மாப்பிள்ளையின் ஜாதகங்களை அனுப்பியுள்ளேன். ஆண் குழந்தை அவர்களுக்குப் பிறக்குமா? வேலையில் எதிர்காலம் எப்படி இருக்கும்?**

**- எஸ்.வசந்தா, புதுக்கோட்டை**

உங்கள் பெண்ணுக்கு ஒரு பெண், ஒரு ஆண் குழந்தை பிறக்க வாய்ப்புள்ளது. 2007-ல் ஆண் குழந்தை பிறக்கும். 2006-ல் வேலையில் உயர்வும் இடமாற்றமும் கிட்டும். நல்ல எதிர்காலம் இருக்கிறது. பரிகாரம் தேவை இல்லை.

**❑ என் நோய் நொடி எப்போது தீரும்? ஆயுள்பலம் எப்படி? சொந்தமாகத் தொழில் தொடங்கலாமா?**

**- வி.சுப்பிரமணி, வேலூர்**

தங்கள் ஜாதகப்படி ராகு தசை ராகு புத்தி 16.6.06 வரை நடக்கும். ராகு தசை குரு புத்தி வரும்போது நோய், நொடி, கடன் தொல்லை நீங்கும். கடந்த பத்துவருட காலமாக உங்களுக்கு நேரம் சரிவர இல்லை. ஆதலால்தான் சிரமத்துக்கு ஆளாகியுள்ளீர்கள். இனிமேல் பாதிப்பு இருக்காது. ஒருசில மாதங்களில் தனியார் துறையில் வேலை கிடைக்கும். சொந்தத் தொழில் செய்யும் யோகம் இல்லை. ஆயும் பலம்





தீர்க்கம்.

**❑ எந்தத் துறையில் எனக்கு வேலை கிடைக்கும்? எனது திருமணம், கலை, வாழ்வு பற்றிக் கூறவும்? அரசியலில் ஈடுபட்டால் எனக்கு வெற்றி கிடைக்குமா?**

**- பி.தர்மதாசன், மட்டக்களப்பு, இலங்கை**

தங்களுக்கு 22 வயது நடக்கிறது. உங்கள் ராசிப்படி தொழில்நுட்பத் துறையில் பணி அமையும். உறவு இல்லாத இடத்தில் பெற்றோர் பார்த்து வைக்கப்பட்ட திருமணம் நடக்கும். கலை அல்லது எழுத்துத் துறையில் நல்ல முன்னேற்றம் அடைவீர்கள். அரசியல் பிரவேசம் கிடையாது. எதிர்காலம் நன்றாக இருக்கும்.

**❑ எனது இரண்டு மகன்களின் திருமணம் எப்போது நடக்கும்?**

**- எஸ். லலிதா, திருச்சி**

சிரஞ்சீவி எஸ். பாலாஜி ஜாதகப்படி ராகு தசை நடைபெறுகிறது. 2006-ம் வருடக் கடைசியில் திருமணம் நடக்கும். உறவில்லாத இடத்தில், மனதுக்குப் பிடித்த இடத்தில் திருமணம் நடக்கும். பரிகாரம் வேண்டாம்.

சிரஞ்சீவி எஸ். சீனிவாசன் ஜாதகப்படி சுக்ரதசை நடக்கிறது. படித்த, பண்புள்ள பெண் அமைவாள். 2007 ஆரம்பத்தில் திருமணம் நடக்கும்.

# பரத்வாஜ் பதில்கள்!



றம் ஏற்படும். வராத பணம் வந்து சேரும். நீண்ட நாள் இருந்து வந்த கடன் தொல்லை தீரும். உடல் ஆரோக்கியம் பாதிக்காது. சிலருக்கு வீடு மாற்றம் ஏற்படும். எதிரிகளால் தொல்லை இராது. செலவுகள் கட்டுக்குள் இருக்கும். திருமணத் தடை விலகும். வழக்கு வெற்றி பெறும். வியாபாரிகள் நற்பலனை அடைவார்கள். சனி / ராகு / கேது வழிபாடு நன்மை அளிக்கும்.

**மகரம்:** சந்தோஷமான வாரம். மன உளைச்சல் தீரும். நீண்ட நாள் காத்திருந்த பதவி கைக்குக் கிட்டும். கௌரவம் மேலோங்கும். கணவன் - மனைவி உறவு நன்றாக இருக்கும். கொடுக்கல் வாங்கல் சிக்கல் தீரும். மாணவ / மாணவியர் படிப்பில் வளர்ச்சி அடைவார்கள். எதிரிகள் தொல்லை விலகும். உத்தியோகஸ்தர்களுக்குப் பணி மாற்றம், பதவி உயர்வு கிட்டும். வியாபாரிகள் தொழில் துறையில் நல்ல முன்னேற்றம் காண்பர். உடல் ஆரோக்கியம் பாதிக்காது. சனி / குரு வழிபாடு நற்பலனைத் தரும்.

**கும்பம்:** வேலையில் நற்பெயர் கிடைக்கும். உத்தியோகத்தில் பணி உயர்வு, பண உயர்வுக்குப் பரிந்துரை செய்யப்படுவீர்கள். வண்டி வாகனத்தில் செல்லும்போது கவனம் தேவை. உடல் ஆரோக்கியம் நன்றாக இருக்கும். நீண்ட நாள் கோரிக்கைகள் நிறைவேறும். எதிரிகளால் தொல்லை இருக்காது. உணவுக் கட்டுப்பாடு அவசியம். தடை விலகி திருமண காரியம் கைகூடும். வியாபாரத்தில் சுறுசுறுப்புடன் விளங்குவீர்கள். வேலை தேடுவோருக்கு உடன் வேலை கிட்டும். மாணவ / மாணவியர் படிப்பில் கவனம் தேவை. ராகு / கேது வழிபாடு நலம் தரும்.

**மீனம்:** உடல் நலிவு விலகும். கொடுக்கல் வாங்கல் நன்றாக இருக்கும். திருமண காரியம் கைகூடும். சிலருக்கு வீடு மாற்றம் ஏற்படும். நீண்ட தூரப் பிரயாணம் வரும். வேலைப்பளு தீரும். குடும்பத்தைக் கவனிக்க நேரம் இருக்காது. உடல் ஆரோக்கியம் பாதிக்காது. மகப்பேறு பாக்கியம் கிட்டும். செலவுகள் சுபமானதாக இருக்கும். வியாபாரத்தில் மந்தச் சூழ்நிலை விலகும். ராகு / கேது / குருவை வழிபட்டு வந்தால் நற்பலன் தரும்.

மோகவர்ணமுத்து அந்த விஷயத்தை என்னிடம் சொல்லி யோசனை கேட்டபோது அதிர்ச்சியாகவும் அவனைக் குறித்து வருத்த மாகவும் இருந்தது. உடனேயே கூறிவிட்டேன்.

"டேய், வேணாம்டா முத்து. நீ சாதாரண கொத்தனார். பொண்ணு ரொம்ப வசதியான பண்ணையார் வீடுன்னு சொல்ற. உங்க ஜாதி வேற. அவங்க ஜாதி வேற. வீடு கட்டப்போன இடத்துல போய் வீட்டுக்காரிய கட்ட நினைக் காதடா. நீ நிச்சயமா ஏமாந்துதாண்டா போகப் போற. உன்னோட குடும்பமே உன்னை நம்பித் தாண்டா இருக்குது. நினைச்சுப் பாத்துக்க சொல்லிட்டேன்."

"அட சின்ராசு, பொண்ணுங்க ஒருத்தனை பிடிக்கலைன்னா எதுக்குடா வலிய வந்து பேசுவாங்க. திரும்பிக்கூட பார்க்க மாட்டாங்கடா. ஆனா அவ நான் ஒரு நாள் லீவு போட்டதுக்கே எவ்வளவு வருத்தப்பட்டா தெரியுமா? அவளோட போட்டோகூட எனக்குக் கொடுத்திருக்கா பாரேன்!"

எதிரெதிர் துருவங்கள் தவிர எதிரெதிர் நிறங்களும் ஒன்றையொன்று ஈர்க்கும் போல. போட்டோவில் அவள் நல்ல சிவப்பில் இருந்தாள். இந்த போட்டோவை அவன் திருடி வந்து கதை யளக்கிறானா எனச் சந்தேகமடைந்தபோதுதான் அந்த லெட்டரைக் கொடுத்தான். சுவாரஸ்சிய உந்து தலில் வேகமாய் லெட்டரைப் பிரித்துப் பார்த்தேன்.

'அன்புள்ள மோகவனமுத்துக்கு கு.செல்வ ராணி எழுதிக் கொல்வது என்னவென்றால்

# நீ வேணும்டா செல்லம்!

நீங்கல் பார்க்கும்போது வடிவேலு மாரியே இருக்கிறீர்கள். நீங்கள் என்னை பாத்து சிரிக் கும்போது எனக்கு நகைச்சுவையாக வருகிறது. எரும மேய்க்கும்போதும் பாள் கரக்கும்போதும் கூட உங்கல் நெனைப்பாவே உள்ளது. நான் போன நாயத்துக்கெழம டீ.வி.யில் கரகாட்டக்காரன் படம் பார்த்தேன். நீங்கல் எங்கலுக்கு வீடு கட்ட வந்தீர்கல் எப்படி என் மனசின் கோட்ட கட்டினீங்கல். கல்யானம் கட்டினான் உங்கலைத்தான் கட்டுவேன்.

இப்படிக்கு
கு.செல்வராணி'



"அவ அஞ்சாவது பெயிலாடா முத்து?" என்று கேட்டேன். இந்தக் கேள் விக்கு விடை தெரியாவிட் டால் எனக்கு தெஞ்சு



## கோடாங்கிபட்டி புகழேந்தி

அடைத்துக் கொள்ளும்போல் தோன்றியது.

"ஆமாடா, அஞ்சாவது முழுப்பரீட்சை யன்னிக்கு அவ வயசுக்கு வந்துட்டாளாம். அவங்க அப்பாதான்... 'ஒரே பொண்ணு. படிச்சு என்ன பண்ணப் போறா, என்னைக்கு இருந்தாலும் கட்டிக் கொடுக்கப் போற கழுததான்'ன்னு எரும மேய்க்கச் சொல்லிட்டாராம்! ஆமா உனக்கு எப்படிடா அவ அஞ்சாவது பெயில்னு தெரியும்?" என்று அப்பாவியாய் கேட்டான்.

இந்த மாதிரியான அப்பாவித்தனம்தான் இவனிடம் அவளை மயங்கச் செய்ததா அல்லது ஞாயிற்றுக்கிழமை படங்களினால் உண்டான தாக்கமா என்ற சந்தேகமும் கூடவே எழுந்தது.

இந்த இடத்தில் நீங்கள் என்னை ஒரு காதல் தோல்வி கேஸ் என்று நினைத்துவிட வாய்ப்புள்ளது. இந்தப் பட்டிக்காட்டில் எனக்கு யார்மீதும் காதலே ஏற்படவில்லை. நானும் முத்துவைப் போல பயங்கர காதல் பித்தனாக இருந்தது உண்மைதான். ஊரில் இருந்ததிலேயே அழகான மங்கை, மலர்க் கொடி மீதிருந்த பித்தம் அவள் எதிரில் வந்து, "யேஞ் சின்ராசு, படத்துல ஆம்பள,

பொம்பளைங்கள்லாம் அடிக்கடி கட்டிக்கட்டி புடிச்சுக்கிறாங்களே, அவங்களுக்கெல்லாம் கொஞ்சங்கூட கூச்சமாவே இருக்காதா? பஞ்சாயத்து டீ.வில இது மாதிரி பார்க்கும் போது எனக்கு வெட்கவெட்கமா வருது தெரியுமா?" என்றபோது தெளிந்துவிட்டது.

“டேய் சின்ராசு, காப்பிலியபட்டியில நமக்குச் சொந்தக்கார அய்யன் ஒருத்தர் செத்துப் போயிட்டார். தூரத்துச் சொந்தம்னாலும் ஆள் விட்டுட்டாங்க, கழிக்க முடியாது. எனக்குத் தோட்டத்துல வேலை இருக்குது. நீ போய்ட்டு சீக்கிரமா வந்திரு" என்றார் அப்பா. புறப்பட்டேன்.

எழவு வீட்டையடைந்தபோது கூட்டம் அவ்வளவாக இல்லை. ஒரு நடுத்தர வயது ஆள் என்னைப் பார்த்து "தம்பிய எங்கயோ பார்த்த மாதிரி இருக்குதே?" என்று இழுத்தார். "நான் சின்னாளம் பட்டிங்க. அப்பாவுக்குத் தோட்டத்துல கொஞ்சம் வேலை இருந்ததால என்னைத் தாட்டிவுட்டாருங்க" என்றேன். காபித் தட்டோடு நின்றிருந்த பெண்ணை அழைத்து, "தம்பிக்கு காபி கொடும்மா" என்று சொல்லி விலகிப் போனார்.

"காபி எடுத்துக்கோங்க சார்" என்று அவள் சொல்லி முடித்த நொடிக்கு அடுத்த அரைநொடிப் பொழுதில் எனது கை டம்ளரைப் பற்றியது. "விஷம் எடுத்துக் கோங்க சார்" என்று அவள் சொல்லியிருந்தாலும் எனது கை தாமதித்திருக்காது. இவ்வளவு அழகான பெண்ணின் கைகளால் விஷம் குடித்தாலென்ன, அமுது பருகினாலென்ன என்று தோன்றியது. 'சார்' என்ற விளிப்பு என்னை மாதச் சம்பளக்காரன் போல் உணரச் செய்தது. பேன்ட் அணிந்து வந்தது எவ்வளவு நல்லதாய்ப் போயிற்று. அவள்கூட சுடிதார்தான் அணிந்திருந்தாள். அவள் விலகிப்போன பின்னரும், "காபி எடுத்துக்கோங்க சார்... காபி எடுத்துக் கோங்க சார்..." என்று ஒலித்துக் கொண்டேயிருந்தாள் மனத்தில். இம்மாதிரியான பரவச தருணங்களில் சிகரெட் அடிப்பது வழக்கம். இங்கே கடை எங்கே இருக்கிறதென யாரிடம் கேட்கலாம் என யோசித்து, அந்த சுடிதார் பெண்ணையே கேட்போம் என்று கேட்டேன்.

"ஏங்க இங்க பெட்டிக்கடை எங்க இருக்குது?"

"அச்சச்சோ... இது ரொம்ப சின்ன ஊருங்க. கடையெல்லாம் இல்லை. எது வாங்கறதா இருந்தாலும் பக்கத்துல அம்பிளிக்கைதாங்க போகணும்" என்றவள் தொடர்ந்து, "ஏதாவது அவசரமா வாங்கணுமா நீங்க?" என்று கேட்டாள்.

"அவசரமெல்லாம் ஒண்ணும் இல்ல... ஒரே ஒரு சிகரெட் மட்டும் வாங்கணும். ஊர்ல போய் வாங்கிக்கிறேங்க" என்றேன். "நான் வேணா எங்கப்பா வெச்சிருக்கிற சிகரெட்டை எடுத்துட்டு வரட்டுங்களா?" என்று அவள் கேட்டபோது எனக்கு அதிர்ச்சியாகவும், ஆனந்தமாகவும் இருந்தது.

வீட்டுக்குள் போனவள் புத்தம் புது சிகரெட் பெட்டியோடு வந்தாள்.

நான் "ஏங்க உங்களுக்குச் சொந்த ஊரே இதுதானா இல்ல, சொந்தக்காரங்க வீட்டுக்கு வந்திருக்கீங்களா?" என்றதும் "எதுக்கு இப்படிக் கேட்கறீங்க?" என்றாள்.

"இவ்வளவு தைரியமா சிகரெட் எடுத்துட்டு வந்து தர்றீங்களே. இங்க கிராமத்துல புது ஆளுகன்னா பேசவே பயப்படுவாங்க" என்றேன்.

"நான் இதே ஊர்தாங்க. ஆனா திண்டுக்கல் ஹாஸ்டல்ல இருந்து படிச்சேன். அங்க பசங்க பொண்ணுங்க எல்லாம் ரொம்ப சாதாரணமா பேசிக்குவோம். +2 முடிச்சுட்டு வீட்டுல வந்திருக்கேன். நீங்க போய் சிகரெட் அடிங்க. வர்ற புதன் கிழமை எங்க தாத்தாவுக்கு கருமாதியாம். வர முடிஞ்சா வாங்க" என்று சொல்லி மறுபடியும் டம்ளர்களைச் சேகரிக்கப் போயே... போய்விட்டாள். 'நீ வேணும்டா செல்லம்' என்றபடி நான் மயங்கிப் போய் நின்றேன்.

**கை**கூடாமற் போனாலும் காதல், காதலிக்கப்பட்டவர்களைப் பிரிந்த நிலையிலும் வாழ்த்திக் கொண்டிருக்கும்.

- கலைஞர்



அவளுக்காகவே கருமாறிக்கும் சென்றேன். கதைப் புத்தகங்களைப் பார்த்து கர்மசிரத்தையாய் எழுதி வைத்திருந்த கடிதத்தைத் தொட்டுப் பார்த்துக் கொண்டே அவளைத் தேடினேன். என் வயதொத்த ஒருவனுக்கு காபி கொடுத்துக் கொண்டிருந்தாள்.

அவளுக்கு எதிரில் போய் நின்று, "உங்ககிட்ட கொஞ்சம் தனியா பேசணும். வீட்டுக்குப் பின்னால வெயிட் பண்றேன். ப்ளீஸ் மறக்காம வாங்களேன்" என்று சொல்லிவிட்டு வீட்டின் பின்பக்கம் சென்று காத்திருந்தேன்.

சிறிது நேரம் கழித்து வந்தவள், "என்கிட்ட தனியா பேசற அளவுக்கு அப்படி என்னங்க ரகசியம். இன்னொரு சிகரெட் பாக்கெட் வேணுமா?" என்று கேட்டாள். சட்டைப் பையில் இருந்த கடிதத்தை எடுத்து அவள் முன் நீட்டினேன். வாங்கியவள் பேப்பருக்கு வலிக்காதவாறு இரண்டாகக் கிழித்தெறிந்து விட்டுச் சொன்னாள். "என்னால அதைப் படிக்காமலே என்ன இருக்குன்னு சொல்ல முடியும். அது எப்படிங்க எல்லா பசங்களுமே ஒரே மாதிரியே இருக்கீங்க? சரி விடுங்க. நீங்க மாசம் எவ்வளவு சம்பாதிக்கறீங்கன்னு தெரிஞ்சுக்கலாமா?" என்று கேட்டாள்.

"மாதச் சம்பளமெல்லாம் இல்லீங்க. மழை பெய்யறத பொறுத்து வருஷத்துக்கு பத்தாயிரமோ, இருபதாயிரமோ மிச்சமாகும்" என்றேன்.

"எனக்கு இந்த வருஷ ஸ்கூல் ஃபீஸ் மட்டுமே இருபதாயிரம் தெரியுங்களா? இப்போ புதுசா சேரப்போற காலேஜ்ல ஐம்பதாயிரம் டொனேஷன் கட்டி எங்கப்பா எனக்கு சீட் வாங்கியிருக்கிறார். படிச்சு முடிச்சுட்டு நல்ல வேலையில சேரணும். என்னை மாதிரியே படிச்ச மாப்பிள்ளையைக் கட்டிக்கணும். இதுதான் என்னோட எதிர்கால திட்டம். அப்பாவுக்கும் இதுதான் ஆசை. எனக்கும் இதுதான் சரியாப்படுது. நான் அன்னைக்கு உங்களுக்கு காபியும் சிகரெட்டும் தந்தேன்ங்கிறதால உங்களுக்கு என்மேல் காதல் வந்துச்சுன்னா, அதே நாள்ல நான் காபி கொடுத்த எல்லாருமே இப்படி லெட்டரோட வந்து நின்னா என்னாகும்? நான் சொல்றேன்னு தப்பா நினைக்காதீங்க. உங்களுக்கு ஏத்த மாதிரி எவளாவது உங்க கிராமத்துல நிச்சயமா இருப்பா. அவளைப் பாத்து லவ் பண்ணுங்க. என்னால இந்தக் கிராமத்துல வாழறத பத்தி நினைச்சுப் பார்க்கவே முடியல. ஸாரி. நான் வர்றேன்" என்று சொல்லிவிட்டு நகர்ந்தாள்; ஓடினாள். மறைந்தாள்.

மேகவர்ணமுத்துவை நினைத்துப் பரிதாபமாக இருந்தது. அவன் மேகத்தின் நிறத்திலுமில்லை. செல்வராணியின் ஜாதியுமில்லை. வாரச் சம்பளக்காரன்தான் என்றாலும், வருஷத்தில் பாதி நாட்கள் வேலையே கிடைப்பதில்லை. இவனை நம்பி எப்படி செல்வராணி வருவாள்? எனக்காவது இந்த பட்டணக்காரி கைவிட்டாலும் மலர்க்கொடி இருக்கிறாள். இனிமேல் என் காதலை மலர்க்கொடி மீது மட்டுமே படரவிட வேண்டுமென்று நினைத்துக்கொண்டே ஊரை அடைந்தேன். மேகவர்ணமுத்து வீட்டுக்குப் போய் அவனைத் தேற்றி "செல்வராணியை மறந்துவிடு நண்பா" எனச் சொல்ல வேண்டும்.

ஊர்த் தலைவாசல் பெட்டிக்கடையில் சிகரெட்டுகள் வாங்கினேன், எனக்கும் முத்துவுக்கும் சேர்த்து. சிகரெட்டைக் கொடுத்துவிட்டு பெட்டிக்கடை அய்யன் கேட்டார். "என்ன தம்பி, உங்கூட்டாளிக்குக் கல்யாணம் பண்ணி வெச்சுட்டு வர்றியா?"

"கல்யாணமா... என்னங்க சொல்றீங்க?"

"அட என்னப்பா ஒண்ணுமே தெரியாத மாதிரி கேட்கிற. மேகவர்ணமுத்து வேலைக்குப் போன எடத்துல ஒரு பொண்ண செட்டப் பண்ணி கூட்டிட்டு ஓடிட்டானாமே. நிசமாவே உனக்குத் தெரியாதா? அந்தப் பொண்ணு வீட்ல இருந்து வந்து அவனை தேடிட்டுப் போறாங்கப்பா!" என்றார். ●

கல்யாணம் ஆனதும் காதல் காலியாகிவிடாது. கல்யாணத்துக்குப் பிறகும் காதல் காதலாகவே இருக்கும். அதுதான் காதல். என் காதலும் அதுதான்.

- ஷாலினி





# குறையொன்றுமில்லை

முக்கூர் லக்ஷ்மிநரசிம்மாச்சார்யார்

எட்டாம் பாகம் 6

**யோ**கவித்து என்கிற சப்தத்தை ஆசார்யர்கள் மேலும் விளக்கிக் காட்டுகிறார்கள்.

யோக சப்தத்தினாலே வேதமானது சொல்லப்படுகிறது என்கிறார்கள். வேதாத்யயன சம்பத் இருக்கிறது பாருங்கள்... அது பெரிய யோகம். ஜன்மாந்திரத்திலே சுக்ருத விசேஷம் இருந்தால்தான் வேதம் ஒருத்தருக்கு லப்யம் ஆகும் . வேதத்தைக் கசடற கற்று, அந்த வேதத்தைச் சொல்கிற வாக்படுத்வமும் வசப்படும். ஜன்மாந்திர சுக்ருதம் இல்லையென்றால் அது வராது.

வேதத்தை அனவரதமும் சொல்லிக் கொண்டேயிருக்க வேண்டும். பஞ்சமஹா யக்ஞத்திலே, பிரதிப்பிரயோஜனத்தை எதிர்பார்க்காமல் பிராமணன் வேதத்தை அத்யயனம் பண்ண வேண்டும். அத்யயனம் பண்ணி அதை நித்யம் சொல்லவேண்டும்.

மனு ஸ்ம்ருதியானது பிராமணனுக்கு நித்யம் ஆறு கடமைகளைச் சொல்கிறது.

தான் நித்யம் வேதத்தை அத்யயனம் பண்ண வேண்டும்.

தன்னை வந்து அடைந்து கேட்கக் கூடியவர்களுக்கு, வேதத்தை நன்கு சொல்லிக் கொடுக்க வேண்டும்.

தான் நன்கு யக்ஞத்தைப் பண்ணவேண்டும்.

இதரர்களுக்கு ரித்விக்காக இருந்து யக்ஞத்தை நன்கு நடத்தி வைக்க வேண்டும்.

தான் நிறைய தானம் கொடுக்க வேண்டும்.

இதரான் கொடுத்தால் வாங்கிக் கொள்ள வேண்டும்.

இந்த ஆறும் பிராமணனின் நித்ய கடமைகள். ஒருத்தர் தானம் கொடுத்தால் 'வாங்க மாட்டேன்' என்று பிராமணன் சொல்லக் கூடாது. அவர்களுடைய க்ஷேமத்தை உத்தேசித்து இவன் அதை வாங்கிக் கொள்ள வேண்டும்.

இதை விசேஷமாக ஓரிடத்திலே சொல்லியிருக்கிறது: அடுத்த க்ஷணத்திலே ஒருத்தருக்குப் பிராண வியோகம் ஏற்படப் போகிறது; அவர் பிராணன் போய்விடும் என்கிற நிலை. அப்போது என்ன பண்ணுவார்கள் என்றால், அந்தச் சமயத்தில் பிராணன் போகாமல் தடுப்பதற்கு முடியும் என்று சாஸ்திரத்தில் சொன்னபடி செயல்படுவார்கள். அந்தச் சமயத்தில் அவர் தன் கையால் தொட்டு ஒரு தானம் பண்ணவேண்டும். ஒரு பிரும்மவித்துக்கு, கால

புருஷ தானம் என்று பெயர் இந்த தானத்துக்கு.

நல்ல கறுப்பு எள்ளை வெல்லப்பாகு வைத்துக் கிளறி அந்தக் கிளறிய எள்ளைக் கொண்டு யமன் மாதிரி ஓர் உருவத்தை உண்டாக்கி, அதை இந்த மனிதரைக் கொண்டு தொடச் செய்வார்கள். மரணப் படுக்கையிலே இருப்பவர் இப்படித் தொட்டுக் கொடுத்து தானம் பண்ணினால் அவர் உயிர் பிழைத்து விடுவார் என்கிறது சாஸ்திரம். இதற்குப் பெயர் கால புருஷ தானம்.

இப்படி தானம் கொடுப்பவர் நன்றாகப் பிழைத்து விடுவார் என்று சொல்கிற அதே இடத்திலே, அடுத்தது என்ன ஆகும் என்று கேட்டால், தானம் வாங்கிக் கொண்டவர் போய்விடுவார்!

அப்படி வாங்கிக் கொண்டவர் போய்விடுவார் என்றால் யாராவது வாங்கிக் கொள்ள வருவார்களா! இப்படியிருக்கையில் ஒரு பிராமணன் இந்த கால புருஷ தானத்தை வாங்கிக் கொள்வதா? உயிர் போய் விடும் என்றால், எப்படி வாங்கிக் கொள்வது?

ஆனால், வாங்கிக் கொள்ள வருபவரிடம் ஒரு பெரிய தனம் இருக்கிறதே! 'காயத்ரி' ஆகிற தனம் அவரிடம் இருக்கிறது.

மற்றவை ஏதும் தனமே அல்ல! இவன் பொருளைத் தேடிக் கொண்டும் மற்றவர்களைத் தேடிக் கொண்டும் ஓடவே வேண்டாம். இவன்





தன் கிருஹத்திலே இருந்து கொண்டு காயத்ரியை ஜபித்தானேயானால் இவனை நாடி எல்லாமே வரும் - இவன் இருக்கிற இடத்துக்கே வரும். இவன் செல்லும் இடமெல்லாம் சிறப்பு வரும்.

சுவானுஷ்டானத்திலே லோபம் ஏற்பட்டதானால், அப்போது மற்ற விஷயங்களுக்கெல்லாம் இவன் அல்லலுற வேண்டியதுதான். இந்த மாதிரி தானம் வாங்குகிற போது ஒரு ஆயிரம் காயத்ரியை ஜபித்துவிட்டு வாங்கிக் கொண்டால் அந்த தானத்திலே இவருக்குப் பிராண பயம் ஏற்படாது.

காயத்ரி மந்திரத்தினால் அவ்வளவு ரக்ஷணமானது ஏற்படுகிறது.

மனு ஸ்ம்ருதி என்ன சொல்கிறது... கட்டையினால் ஆன ஒரு யானை இருக்கிறது. தோலினாலான மான் இருக்கிறது. பார்க்கிறவர்களெல்லாம் யானை என்கிறார்கள்; மான் என்கிறார்கள்.

வடிவிலே மான் மாதிரியும் யானை மாதிரியும் இருப்பதனாலே யானை என்றும் மான் என்றும் விவரிக்கப்படுகிறது - சொல்கிறார்கள்- அவ்வளவுதான்.

அந்தக் களிறு பிளிறிக் கத்துமா? மான் துள்ளி ஓடுமா?

அந்த மாதிரி எந்த ஒரு பிராமணன் காயத்ரியை அத்யயனம் பண்ணவில்லையோ, அவன் கட்டையினாலே ஆன யானையைப் போன்றவன்தான். கட்டையினாலான யானை எப்படி யானை என்று பெயர் பெறுகிறதோ, தோலினாலான மான் எவ்வாறு மான் என்று பெயர் பெறுகிறதோ, அப்படி பிராமணன் என்று வெறுமே அவன் பெயர் பெறுகிறான், அவ்வளவுதான்!

வேத அத்யயனத்துக்கு அத்தனை மகிமை. வேதத்தை யோகம் என்றொரு சொல்லாலும் குறிப்பிடுவதுண்டு.

ஆசிருதானாம் வத்ஸல: என்று பகவானுக்குப் பெயர். பிரபதன சுலபன் என்று ஒரு திருநாமம்.

அடிபணியக்கூடியவர்களுக்குப் பரம சுலபமாகக் கிடைக்கக் கூடியவன் அவன்.

பின்னால், சஹஸ்ரநாமத்தில் 'விஜிதாத்மா விதேயாத்மா, ஸத்கீர்த்தி சின்ன ஸம்சய:' என்கிற திருநாமங்கள் இதே அர்த்தத்தைத்தான் காட்டுகின்றன.

விஜிதாத்மா விதேயாத்மா என்று பராசர பட்டர் பிரித்துப் பொருளுரைத்தார்.

ஆதிசங்கர பகவத் பாதாள் விஜிதாத்மா அவிதேயாத்மா என்று பதம் பிரித்துப் பொருளுரைத்தார்!

விஜிதாத்மா என்றால், எல்லாவற்றையும் ஜெயித்தவன். அவிதேயாத்மா என்றால் யாருக்கும் வணங்காதவன் என்பது ஆதிசங்கருடைய வாக்கு.

அவருடைய பாஷ்யத்திலே 'எல்லாரையும் ஜெயிக்கக் கூடியவன் பரமாத்மா; யாராலும் ஜெயிக்கப்படாதவன்' என்று வருகிறது.

எல்லாரையும் ஜெயிக்கக் கூடிய இந்த பரமாத்மாவே ஒரு சிலருக்கு வணங்கி நிற்கக் கூடியவனாகவும் இருக்கிறான். தன்னை அடிபணியக்கூடியவர்களை வணங்கி நிற்கிறான் பரமாத்மா. எதிரம்பு கோத்து, அவனை ஜெயிக்க முடியாது. திருவடியைப் பற்றியவர்கள் அவனைச் சுலபமாக ஜெயித்து விடலாம்.

பக்திஸ்ச்ய நியதா வீரா!
பாவோ நான்யத்ர கச்சதி
என்றான் ஆஞ்சநேயன்.

"வீரன் என்றால் நீயல்லவா மஹாவீரன்! ஆனால், உன் வீரம் என்னிடத்திலே செல்லுபடியாகாது. உன்னை எதிர்ப்பவர் களிடத்தில் வேண்டுமானால் உன்னுடைய வீரம் செல்லுபடியாகலாம். ஆனால் உன் திருவடி

காதல் என்பது திருமணமாகாதவர்களுக்கு மட்டும் என்று புரிந்து கொண்டிருப்பவர்கள் தங்கள் பார்வையை மாற்றிக் கொள்ள வேண்டும். வாழ்க்கைத் துணையைக் காதலிக்க வேண்டும்.

- லேனா தமிழ்வாணன்



யைப் பற்றிய என்னிடத்திலே உன் வீரம் என்னவென்று காட்டி 'விட முடியும்! உன்னைத் தவிர எனக்கு வேறெதிலேயும் மனது போகவில்லை'' என்று பேசினான் ஆஞ்ச நேயன்.

யக்ஞ யாகாதிகளி னாலே பகவானை ஆராதிக்கக் கூடியவர் களுக்கு, இந்தச் சரீரத்திலே இருக்கக் கூடிய அவயவங்கள், சரீரத்தைப் பெற்றிருக்கும்படியான ஆத்மா என்று எல்லாவற்றுக்கும் க்ஷேமத்தை பகவான் உண்டுபண்ணு கிறான்.

ஆயுள், இந்த்ரியங்கள், அவற்றின் பலம், அதைத் தவிர மனம் - வாக்கு எல்லாமே நல்ல முறையிலே செயல்படவேண்டும் என்பது அவா. இவை மொத்தம் நல்ல முறையிலே செயல்படுவதுடன் இது மொத்தம் பகவத் விநியோகமாக வேண்டும்.

வாக்கு இருக்கிறதென்றால், அவன் பெருமை பேசுகிற வரையில் அது வாக்கு.

சிரோர்த்ரம் என்றால் - அவன் பெருமையைக் கேட்டால் அது சிரோர்த்ரம்.

அவன் பெருமையைக் கேட்பதற்காக இந்தச் செவி. அவனை அடிபணிவதற்காக இந்தச் சரீரம். அவனை நினைப்பதற்காக இந்த மனம். அவன் பெருமையைப் பேசுவதற்காக இந்த நாக்கு - வாக்கு. அதற்காகத்தான் அனைத்தையும் பகவான் கொடுத்திருக்கிறான்.

அந்த மாதிரி இந்த இந்த்ரியங்களை பகவத் விஷயத்தில் ஈடுபடுத்தினோமேயா னால், இந்த ஆத்மா கெட்டொழியாமல், நல்ல முறையிலே அவன் ஏற்கக் கூடிய ஹவிஸாக விளங்கும்.

ஆத்மார்ப்பணம் என்கிற சிறந்த யக்ஞத்தை நாம் பண்ணி, பகவத் அனுக்ரஹத்தைச் சம்பாதிக்க முடியும் என்று வேதமானது யக்ஞ பிரகரணத்திலே காட்டிக் கொடுக்கிறது.

அதையேதான் 'யோகோ யோக விதாம் நேதா பிரதான புருஷேச்வர: நாரசிம்ஹ வபு ஸ்ரீமான் கேசவ புருஷோத்தம:' என்கிறது சஹஸ்ரநாமம்.

யோகமாக பகவானே இருக்கிறான் என்று பார்த்தோம். யோக க்ஷேமத்தை உலகத்தவர்க்கு உண்டு பண்ணுகிறான்.

யோகிகளிடத்திலே நித்யவாஸம் பண்ணக் கூடியவன் அவன். அவனுக்கே யோகமென்று பெயர் - என்றெல்லாம் ஏற்கெனவே பார்த்தோம்.

பராசர பட்டர் இந்த யோக சப்தத் துக்கு மிக அழகாக வியாக்யானம் செய்கிறார்:

அடையப்படுகிறவனானதனாலே அவன் யோக: என்று அழைக்கப்படு கிறான்.

ஜீவாத்மா பகவானை ஆராதித்தால், அந்த ஆராதனத்தினாலே சந்துஷ்டி அடைந்து, பரமாத்மா அவனை அனுக்கிரஹம் பண்ணுகிறான். அவன் இருக்கிற இடத்துக்கே இவன் அழைத்துச் செல்லப்படுகிறான். பகவானாலேயே அழைத்துச் செல்லப்படுகிறான்.

அப்படி நம்மை அழைத்துச் செல் பவன், தன்னை வந்து அடையச் செய்கிற வன் யோக: என்ற சப்தத்தால் அழைக் கப்படுகிறான்.

இந்தப் பொருள்பட வராஹ சரம சுலோகமும் கீதையின் 'சர்வதர்மான் பரித்யஜ்ய' சுலோகமும் அமைந்திருக்கின் றன. இப்படிப்பட்ட சுலோகங்களுக்கெல் லாம் மூலமாக, வராஹ அவதாரத்திலே பகவான் பேசியதை ஆண்டாள் சொல் கிறாள்.

(வளரும்)

**கா**தல் தோல்வியால் தற்கொலைக்கு முயல்பவர்களைக் கண்டால் வேதனை யாக இருக்கிறது. கல்லூரியின் கடைசி நாளில் நண்பர்களைப் பிரிகிறபோது எப்படி அழுகிறோம். ஆனால் கல்லூரியை விட்டு வெளியே வந்த பிறகு நமக்கு அதைவிட அற்புதமான நண்பர்கள் கிடைத் தார்களே! காதலிலும் இது நிகழும்.

- ரபி பெர்னார்ட்



# வருணைவிக்கும் காதலுக்கு 'ஜே'!

அன்னதான விரிவாக்கம், அரசு ஊழியர்களுக்குச் சலுகை என தேர்தலை முன்னிட்டு அசத்தி வரும் அ.தி.மு.க. அரசு, அடுத்ததாகக் காதலர்களையும் வளைத்துப்போடும் எண்ணத்துடன் ஜெயலலிதாவின் தலைமையில் கூடுகிறது.

**ஜெயலலிதா** : உங்க எல்லோரையும் இங்கே எதுக்கு வரச் சொல்லி இருக்கேன் தெரியுமா? வர்ற பிப்ரவரி பதினாலு காதலர்கள் தினத்தின்போது தமிழ்நாட்டுல இருக்கிற காதலர்களை எல்லாம் சந்தோஷத்துல குளிப்பாட்டணும். அதுல குஷியாகி அவங்க ஓட்டு மொத்தமா நமக்கே வோட்டுப் போடணும். அதுக்கு என்னவெல்லாம் செய்யலாம்னு ஐடியாக்களைச் சொல்லுங்க.

**பன்னீர்செல்வம்** : அம்மா உங்க மனசுல சில திட்டங்கள் இருக்குமில்லீங்களா? அதை முதல்ல சொல்லுங்க. அப்புறமா எங்க யோசனைகளைச் சொல்றோம்.

**ராதாரவி** : ஆமாம்மா. அதுதான் முறை.

**ஜெயலலிதா** : சரி சொல்றேன். தமிழ்நாட்டுல இருக்கிற எல்லா பூங்காக்களிலும் வண்ண விளக்குகளைப் போட்டு அலங்கரிக்கிறோம். அன்றைக்கு காதலர்களுக்கு மட்டும்தான் பூங்காவுல அனுமதி. வேற யாரும் வரக் கூடாது.



**எஸ்.எஸ். சந்திரன்** : அருமையான யோசனைம்மா. குறிப்பா வாக்கிங்னு சொல்லிக்கிட்டு உள்ளே நுழைஞ்சு, 'காலம் ரொம்ப கெட்டுப்போச்சு. அந்தக் காலத்துல நாம எல்லாம் எப்படி இருப்போம்'னு புலம்பற பெருசுங்களை பார்க் இருக்கிற ரோட்டுப் பக்கமே வர விடக்கூடாது. ஒரு கிலோ மீட்டருக்கு முன்னாடியே போலீஸைப் போட்டு மடக்கி திருப்பி அனுப்பிடணும்.

**ராதாரவி** : அப்படி அனுப்பறப்ப போலீஸைப் பக்குவமா பேசச் சொல்லணும். முரட்டுத்தனம் காட்டிடக் கூடாது. அப்புறம் இதுக்காகவே காத்திருக்கிற அந்த டீ.வி.க்காரங்க படம் பிடிச்சுடுவாங்க. 'தள்ளாத வயதுக்காரர்கள் மீது தடியடி. வாக்கிங் வந்தவர்களிடம் வன்முறை'ன்னு ராகத்தோடு தலைப்புச் செய்தி வாசிக்க ஆரம்பிச்சுடுவாங்க.

**பன்னீர்செல்வம்** : அதெல்லாம் அம்மா ஆர்டர் போட்டுடுவாங்க. அப்படியே ஏதாவது நடந்தாலும் பாதிக்கப்பட்டவங்களுக்கு உதவித் தொகையைக் கொடுத்துட்டாப் போச்சு. என்னம்மா சொல்றீங்க?

**ஜெயலலிதா** : அப்படி எதுவும் நடக்காது. நீங்களா அவசரப்பட்டு எதையாவது சொல்லாதீங்க.

**பன்னீர்செல்வம்** : ஐயையோ! நான் எதுக்கும்மா வாயைத் திறக்கப் போறேன். உங்க அடுத்த யோசனையைச் சொல்லுங்க.

**ஜெயலலிதா** : அடுத்தது கடற்கரைக்கு வர்ற ஜோடிகளுக்காக

கூடுதலா நிறையப் படகுகளை கொண்டு வந்து நிறுத்தி வைக்கறோம். சுண்டல், ஐஸ்னு நிறைய அயிட்டங்களை இலவசமா கொடுக்கறோம்.

**ராதாரவி** : பிரமாதமான யோசனைம்மா. அப்படிக் கொடுக்கறப்பவும் தள்ளுமுள்ளு நடந்துடாம இருக்கிறதுக்கு வரிசையில வரச் சொல்லி போலீஸைப் போடணும். இல்லேன்னா 'கடற்கரையில் கடும் அமளி. காதலர்களைக் காயமடையச் செய்த காவலர்கள்'னு செய்தியைப் போட்டுடுவாங்க.

**எஸ்.எஸ்.சந்திரன்** : அடடா! எதுக்கு இப்படிப் பயப்படறீங்க? சும்மா இருங்க. எதை எப்படிச் சமாளிக்கிறதுன்னு அம்மாவுக்குத் தெரியாதா? அம்மா, இந்த இடத்துல நான் ஒரு யோசனையைச் சொல்லலாமா?

**ஜெயலலிதா** : சொல்லுங்க.

**எஸ்.எஸ்.சந்திரன்** : கடற்கரையில உச்சி வெய்யிலுல உட்கார்ந்துக்கிட்டு அவங்க காதல் பண்றதைப் பார்க்கறப்ப மனசு கஷ்டப்படுது. காதலியோட துப்பட்டாவைத் தலைக்குப் போர்த்திக்கறாங்க. அது ரொம்ப மெல்லிசா இருக்கு. அதனால அவங்களுக்கு வலுவான துண்டுகளை இலவசமா கொடுக்கலாம்.

**பன்னீர்செல்வம்** : ஆமாம்மா.



**குசும்புராஜ்**

பச்சை கலர்ல கொடுப்போம். அதுல உங்க படத்தையும், கட்சி சின்னத்தையும் போட்டு காதலர்களுக்காகக் கருணை உள்ளத்துடன் அம்மா ஆட்சியில் வழங்கப்பட்டதுன்னு அச்சிடுவோம்.

**ஜெயலலிதா** : நல்ல

யோசனைதான். அப்படியே செய்வோம். இப்பவே அதுக்கான ஆர்டரைக் கொடுத்துடுங்க. துணி நல்ல தரத்தோடு இருக்கட்டும். அடுத்ததா வேற எங்கே எல்லாம் காதலர்கள் கூடுவாங்க.

**எஸ்.எஸ்.சந்திரன்** : இடங்களுக்கா பஞ்சம்? காபி ஷாப், ப்ரௌஸிங் சென்டர், சினிமா தியேட்டர்னு ஒரு இடத்தையும் விடறதில்லை. ரோட்டோரம் பைக்கை பார்க் பண்ணிட்டு லவ் பண்ண ஆரம்பிச்சுட்டாங்க. முன்னாடி எல்லாம் பொது மக்கள் பார்வையில படாம ஒதுங்கிப் போவாங்க. இப்ப பொதுமக்கள்தான் இவங்க பார்வையில படாம ஒதுங்கிப் போறாங்க.

**ஜெயலலிதா** : அப்போ தொண்டர்களை ரோடு ரோடா அனுப்பி கண்ணுலபடற காதலர்களுக்கு இனிப்பைக் கொடுக்கச் சொல்லுங்க.

**பன்னீர்செல்வம்** : சும்மா போனா எப்படிம்மா? ஆட்டோவுல ஸ்பீக்கர் கட்டி பாட்டு போட்டுக்கிட்டுப் போகணும். 'வாழ வைக்கும் காதலுக்கு ஜெ! காதலர்களை வாழ வைக்கும் அம்மாவுக்கு ஜெ!' இப்படி விதவிதமான மெட்டுக்கள்ல பாட்டை எழுதி ரிக்கார்டு பண்ண நான் ஏற்பாடு பண்றேம்மா.

**ராதாரவி** : ஒரு காதல் ஜோடியை இங்கே வரச் சொல்லி உங்க கையால பூங்கொத்து கொடுக்க வெச்சு, அதை போட்டோ எடுத்து பத்திரிகைக்கு அனுப்புவோம். 'காதலை எதிர்க்கும் பெற்றோர்களைச் சட்டம் கடுமையாகத் தண்டிக்கும்'னு நீங்க ஒரு எச்சரிக்கை அறிவிப்பைக் கொடுங்கம்மா.

**ஜெயலலிதா** : முட்டாள்தனமா பேசாதீங்க. அப்படிச் சொன்னா பெற்றவர்கள் கடுப்பாயிடுவாங்க. அவங்களோட வோட்டுங்க எதிர் கட்சிக்குப் போய்டும். காதலர்கள் வோட்டுக்களையும் வாங்கணும். பெற்றோர்கள் வோட்டுக்களையும் வாங்கணும். 'காதலிப்பதற்கு உங்களுக்கு எவ்வளவு உரிமை இருக்கிறதோ அந்த அளவுக்கு உங்களைப் பெற்றவர்களை மதிக்கும் கடமையும் இருக்கிறது. உரிமையைக் கேட்கும் நீங்கள் கடமையையும் செய்ய வேண்டும்' அப்படின்னு பேசறேன்.

**எஸ்.எஸ்.சந்திரன்** : சூப்பர்ம்மா. நீங்க யாருக்குச் சாதகமா பேசினீங்கன்னே ஜனங்களுக்குப் புரியக்கூடாது. அந்தக் குழப்பத்துலயே வந்து வோட்டுக்களைப் போட்டுடணும். நாங்க எதுக்கு இருக்கோம்? நீங்க விட்ட இடத்துல இருந்து ஆரம்பிச்சு இன்னும் குழப்பிடறோம்.

**ஜெயலலிதா** : சரி! கூட்டம் முடிஞ்சது. போய் வேலையைக் கவனிங்க.

**பன்னீர்செல்வம்** : காதலர்களுக்குச் சிறப்புச் செய்யும் அம்மா.

**மற்றவர்கள்** : வாழ்க! வாழ்க!

**ராதாரவி** : ஆயிரம் அம்பிகாபதிகளையும் ஆயிரம் அமராவதிகளையும் உருவாக்கிய அம்மா...

**மற்றவர்கள்** : வாழ்க! வாழ்க!

(எல்லோரும் கலைந்து செல்கிறார்கள்)

**காதல்**

ஒருவரை அழகாக்குவது போல் வேறெந்த ஒப்பனையாலும் அழகாக்க முடியாது. காதல் வசப்பட்டிருக்கிற முகங்களை என்னால் பார்த்த மாத்திரத்தில் சொல்லிவிட முடியும். காதல் உள்ளத்தை அழகாக்கும். உள்ளத்தில் ஒளியுண்டாயின் முகத்தில் அது வீசும்.

- ஞானி





# "எங்களை கவனியுங்க!"

**"நா**ங்கள் ஊன முற்றவர்கள் என்று யார் சொன்னது... நாங்கள் அனைவருமே மாற்றுத் திறன் கொண்டவர்கள்!"

''எங்களுக்குத் தேவை மற்றவர்களின் தர்மமோ, இரக்கமோ, பரிதாபமோ அல்ல.. எங்களுக்குரிய உரிமைகள் மட்டுமே!''

-மேற்கண்ட இரு தன்னம்பிக்கை பொதிந்த வாக்கியங்களும் எங்கிருந்து வெளிப்பட்டவை தெரியுமா.. நந்தினி வாய்ஸ் ஃபார் தி டிப்ரைவ்டு மற்றும் தமிழ்நாடு உடல் ஊனமுற்றோர் சங்கங்களின் கூட்டமைப்பு இரண்டும் இணைந்து நடத்திய கூட்டத்தில் இருந்துதான்.

தேர்தல் நெருக்கத்தில் இப்படிப் பட்ட கூட்டங்கள் மூலைக்கு மூலை நடத்தப்படுவது வாடிக்கைதான். ஆனால் இந்த அமைப்புகளின் கூட்டம் வழக்கமான ஒன்றல்ல என்பது அங்கு சென்றவர்களுக்கு நிச்சயம் தெரிந்திருக்கும்.

இலவச கல்வித் திட்டம், வேலை வாய்ப்பு, சுயதொழில் வாய்ப்பு, விளையாட்டுத்திறன் உள்ளிட்ட பல்வேறு கோரிக்கைகளை வழக்கம்போல வலியுறுத்தும் கூட்டமாக அல்லாமல் சில வித்தியாசமான, ஆக்கபூர்வமான, தைரியமான கோரிக்கைகள் முன் வைக்கப்பட்டதுதான் இந்தக் கூட்டத்தின் சிறப்பு.

''ஒவ்வொரு தேர்தலின்போதும் அனைத்துக் கட்சிகளும் தேர்தல் அறிக்கைகளை வெளியிடுகின்றன. ஆனால் அவற்றில் எங்களைப் பற்றி எதுவுமே இருக்காது. இம்முறையும் எங்களுடைய பிரச்னைகளுக்கு உரிய தீர்வு காண அறிக்கைகளில் உறுதி கூறாவிட்டால் தமிழகத்தில் உள்ள பதினேழு லட்சம் மாற்றுத் திறன் கொண்டவர்களும், அவர்களுடைய குடும்பத்தைச் சேர்ந்த 43 லட்சம் பேரும் தேர்தலைப் புறக்கணிக்க முடிவெடுத்துள்ளோம்'' என்றார் கூட்டத்தில் பேசிய சிம்மசந்திரன்.


* சிம்மசந்திரன்

''பொதுவாக எங்களுடைய பிரச்னைகள் சட்டமன்ற - நாடாளுமன்றங்களில் முறையாகக் கொண்டு செல்லப்படுவதில் நிறையத் தடைகள் இருப்பதாக உணர்கிறோம். ஆகவே எங்களுடைய பிரச்னைகளை நாங்கள் அரசின் கவனத்துக்கு நேரடியாகக் கொண்டு செல்ல வசதியாக, எங்களுக்குப் பிரதிநிதித்துவம் கிடைக்கத் தேவையான சட்டத் திருத்தம் கொண்டு வர வேண்டும்'' என்றார் மீனாட்சி. இவர் வித்யாசாகர் ஊனமுற்றோர் சட்ட மையத்தின் உதவி ஒருங்கிணைப்பாளராக உள்ளார்.


* மீனாட்சி

இவர்களுடைய கோரிக்கைகளுக்கு தேர்தல் நேரம் என்பதால் அரசும், அரசியல்வாதிகளும் நிச்சயம் செவி சாய்ப்பார்கள். ஆனால் செயல் வடிவம் தருவார்களா...? அவர்களுடைய மனச்சாட்சிக்குத்தான் தெரியும்!

- **கோகிலா**

படங்கள் : **ராஜன்**



IT DATA

# சி.டி. போயி பி.டி. வந்தது டும்டும்டும்!

### ப்ளேயர் புதுசு :

**வி**ண்டோஸ் ஆபரேட்டிங் சிஸ்டத்தைத்தான் நிறைய பேர் பயன்படுத்துகிறோம். ஆனால் விண்டோஸ் மீடியா ப்ளேயரைப் பயன்படுத்துவதில் நமக்கு அவ்வளவு திருப்தி இருந்திருக்காது. ரியல் ப்ளேயர், குயிக்டைம், டிவ்-எக்ஸ் என பிற ப்ளேயர்களையும் கணினியில் வைத்திருப்போம். அதையெல்லாம் தூக்கிப் போடுங்க. இனிமேல் விண்டோஸ் மீடியா ப்ளேயரே சமர்த்தா உங்க மனசுக்குப் பிடிச்ச மாதிரி வேலை செய்யும். அதற்காகத்தான் புதுசா 'மீடியா ப்ளேயர் க்ளாஸிக்' களமிறங்கியிருக்கிறது என்கிறது மைக்ரோசாஃப்ட். அப்படி என்ன ஸ்பெஷல்? இந்த 'மீடியா ப்ளேயர் க்ளாஸிக்'கில் டி.வி.டி. இயங்கும். வழக்கமான வீடியோ ஃபைல்கள் தவிர, மூன்றாம் தலைமுறை வீடியா ஃபைல்களும் இதில் இயங்கும். வீடியோ ஓடிக் கொண்டிருக்கும் போதே ஜூம் செய்து பார்க்கும் வசதியுள்ளது. தற்போது இணையத்தில் பரபரப்பாக பலரால் டென்லோட் செய்யப்பட்டுக் கொண்டிருக்கிறது க்ளாஸிக். போகப் போகத் தெரியும் இந்த ப்ளேயரின் குறையும் நிறையும்.



### ஐபோட்-க்கு மூக்கணாங்கயிறு :

**ஆ**ப்பிள் நிறுவனத்தின் ஐபோட்ஸ் (ஆயிரக்கணக்கான பாடல்களைச் சேமித்து வைத்து, கேட்கும் கருவி) விற்பனை ஒருபுறம் கட்டுக்கடங்காமல் உயர்ந்து கொண்டேயிருக்க, மறுபுறம் 'அய்யோ, காதோடு நெருக்கமாக வைத்து அதிக அளவு ஒலியில் இசை கேட்பதால் காதுகள் பாதிக்கப்படும்' என எச்சரிக்கைகள் எழுந்தன. இது தொடர்பாக வழக்கு ஒன்றும் தொடரப்பட்டது. 'இனி ஆப்பிள் நிறுவனம் தயாரிக்கும் ஐபோட்களில் ஒலி அளவு 100 டெசிபலைத் தாண்டக்கூடாது' என கோர்ட் கட்டளையிட்டுள்ளது. அதுவும் சரிதானே!

### ஓவர் டூ பி.டி.

**ப்**ளாப்பிகள் மெல்ல மெல்ல மியூசியத்துக்குச் சென்று கொண்டிருக்கின்றன. அதற்குப் பக்கத்திலே சி.டி.க்களும் சென்று அமரப் போகின்றன. இன்னும் சில வருடங்களில் டி.வி.டி.க்களின் ஆதிக்கம் நிகழ்ந்து கொண்டிருக்கும் வேளையில், 'டி.வி.டி. என்னடா டி.வி.டி., இதோ வந்துட்டேன் பாருடா ஹெச்.டி.டி.வி.டி.' என களமிறங்கியுள்ளது ஹை டென்சிட்டி டி.வி.டி.- இதனை அடுத்த தலைமுறை டி.வி.டி. எனலாம். இதன் டேட்டா கொள்ளளவு எவ்வளவு தெரியுமா? 15 ஜி.பி. ஒரு சின்ன

வட்டினுள் 15 ஜி.பி. டேட்டாவைச் சேமிக்கலாமா என நாம் ஆச்சரியப்பட்டுக் கொண்டிருக்கும்போதே, 'அட இதென்ன ஆச்சரியம். நான் யாரு தெரியுமா? பி.டி.. என்னோட டேட்டா கொள்ளளவு எவ்



வளவு தெரியுமா? 25 ஜி.பி.!' என குதிக்கிறது பி.டி. எனப்படும் ப்ளூ-ரே டிஸ்க். ஆப்டிகல் ஸ்டோரேஜ் டிவைஸ்களில் இன்றைய நாளில் அதிக கொள்ளளவு கொண்டது பி.டிதான். அதற்காக இது அளவில் பெரிதாக இருக்குமென நினைத்துவிடக் கூடாது. ஒரு சி.டியின் அளவில்தான் இருக்கும் பி.டி.யும். டி.வி.டி.க்களில் டேட்டாவை எழுத சிவப்பு லேசர் பயன்படுத்தப்படுவது போல், பி.டி.க்களில் ஊதா லேசர் கதிர் பயன்படுத்தப்படுகிறது. எல்லா முன்னணி நிறுவனங்களும் தற்போது போட்டி போட்டுக்கொண்டு பி.டி. தயாரிப்பில் இறங்கியுள்ளன. ப்ளூ-ரே டிஸ்க்குகளாக ஹாலிவுட் படங்கள் வரத் தொடங்கிவிட்டன. இப்பொழுது விரட்டி விரட்டி டி.வி.டி. ப்ளேயரை வாங்கிக் கொண்டிருக்கும் மக்கள், வருங்காலத்தில் பி.டி. ப்ளேயர்களுக்கு மாற வேண்டிய கட்டாயம் வந்துவிடும்.

**வாய்ஸ் ப்ளேயர் :**

“என் நிறுவனத்தின் வளர்ச்சி என்பதற்கு நான் எல்லை வகுத்துக் கொண்டதே கிடையாது. என் குறிக்கோள்களின் உயரத்தை நான் அதிகரித்துக் கொண்டே இருப்பேன். கனவுகள் இருந்தால் மட்டுமே அவற்றை அடைய முடியும்!" - திருபாய் அம்பானி, ரிலையன்ஸ் நிறுவனர்.

- முகில்

**துவக்க நிலையிலேயே ஒரு தேசியக் கட்சியின் மாநிலத் தலைவராக, அதிரடியாக அரசியலில் இறங்கியிருக்கிறார் நடிகர் கார்த்திக். தினசரி நான்கு மணி நேரம்தான் தூக்கமாம்! பிஸியாக இருந்தவரிடம் பேசினோம்.**

**தமிழ்நாட்டில் செல்வாக்குப் பெற்ற தேசிய, மாநில கட்சிகள் பல இருக்க, அகில இந்திய ஃபார்வர்டு பிளாக் கட்சியில் சேர்ந்தது ஏன்? மாநிலத் தலைவர் பதவி கிடைக்கிறது என்பதற்காக அதில் இணைந்தீர்களா?**

"உங்களுக்கு ஒரு தகவல் ஆச்சர்யமாகக்கூட இருக்கலாம். மறைந்த ஃபார்வர்டு பிளாக் தலைவர் மூக்கையாத் தேவர் அழைப்பை ஏற்று அந்தக் கட்சியில் தன்னை இணைத்துக் கொள்ள விரும்பினார் என் தந்தை முத்துராமன். ஆனால் திடீரென காலமாகிவிட்டார். அப்போது அவர் சேர விரும்பியதற்கும் இப்போது நான் சேர்ந்ததற்கும் ஒரே காரணம்தான் இருக்க முடியும். ஃபார்வர்டு பிளாக் கட்சி பழம் பெரும் அகில இந்தியக் கட்சியாக இருந்தாலும் அந்தக் கட்சிக்கு தமிழ்நாட்டில் உயிர் கொடுத்து வளர்த்தவர் பசும்பொன் தேவர் திருமகன் அவர்கள். அவரது அடியை ஒட்டி மூக்கையாத் தேவர் போன்ற தலைவர்கள் கட்சியின் செல்வாக்கைப் போற்றிக் காத்தனர். 'தேசியம், தெய்வீகம் எனது இரண்டு கண்கள்' என்று சொன்னார் தேவர் திருமகன். கட்சியின் கோட்பாடுகளை இதை விட எளிதாக யாராலும் சொல்ல முடியுமா? இதுதான் எனக்கு மிகவும் பிடித்தது. ஆனால் இடையில் சில சுய நலக்காரர்களிடம் கட்சி சிக்கிக் கொண்டதால், சுருங்கிப் போனது. ஒரு காலகட்டத்தில், திராவிடக் கட்சிகளுக்கு மாற்றாக வந்திருக்க வேண்டிய இந்தக் கட்சிக்கு மீண்டும் புத்துணர்ச்சி ஊட்டி, புதுப் பொலிவு கொடுக்க வேண்டுமென்ற எண்ணத்தில்தான் என்னை இந்தக் கட்சியில் இணைத்துக் கொண்டேன். கட்சியின் அகில இந்திய மத்திய கமிட்டியும் என்னை அரவணைத்துக் கொண்டு பொறுப்பையும் கொடுத்திருக்கிறது."

## "சந்தானம் போன்ற நபர்கள் கட்சியிலிருந்து நீக்கப்பட வேண்டும்!"

**ஃபார்வர்டு பிளாக் கட்சி, தேவர் (முக்குலத்தோர்) இன மக்களின் நலன்களுக்கு மட்டுமே செயல்படும் கட்சி என்ற கண்ணோட்டம் இருக்கிறதே!**

"இது தவறான கருத்து. 'எக்குலமும் போற்றும் முக்குலம்; எக்குலத்தையும் அரவணைக்கும் முக்குலம்' என்று சொல்வார்கள். எந்தவித ஜாதி, மத பேதமின்றி எல்லோருக்

# யாரோடு

காகவும் நாங்கள் பாடுபடுகிறோம். பசும்பொன் தேவர் மற்றும் மூக்கையாத் தேவர் ஆகியோரால் தமிழகத்தில் வளர்ந்த கட்சி என்பதால் அதற்கொரு ஜாதி முத்திரை குத்துகிறார்கள்."

**உங்களுடைய நடவடிக்கைகளை உங்கள் கட்சி சட்டமன்ற உறுப்பினர் சந்தானம் விமர்சனம் செய்கிறாரே!**

"தமிழ்நாட்டில் கட்சி சீரழிய இந்த சந்தானம்தான் காரணம். எங்கள் தேசிய பொதுச் செயலாளர் பிஸ்வாஸ் அவர்களை மரியாதைக் குறைவாக பேசியவர் அவர். இது தவிர ஒரு கூட்டத்தில் தேவர் அய்யா, மூக்கையாத் தேவர் ஆகியோரின் பெருமையைச் சிதைக்கும் வகையிலும் பேசியிருக்கிறார். சந்தானம் போன்ற

நபர்கள் உடனடியாகக் கட்சியிலிருந்து நீக்கப்பட வேண்டுமென்பது என் கருத்து."

**அ.தி.மு.க அரசின் செயல்பாடுகள் குறித்து...**

"இதுவரை திருப்திகரமாகத்தான் இருக்கிறது. இதைச் சொல்வதற்காக அம்மாவுடன் கூட்டணி என்று சொல்ல வேண்டாம். எல்லோரும் எனக்கு நண்பர்களே. யாரையும் எதிரியாக நான் நினைக்கவில்லை."



**பெரும்பாலான உங்கள் கட்சித் தொண்டர்கள் அம்மா ஆதரவாளர்களாக இருக்க, திடுதிப்பென கலைஞரை நீங்கள் சந்தித்தது தி.மு.க. கூட்டணியில் சேருவதற்காகவா?**

"எங்கள் தேசிய பொதுச் செயலாளர் பிஸ்வாஸ், கலைஞரைச் சந்திக்க வேண்டுமென்று விரும்பினார். அதனால் சந்தித்தோம். அப்போது ஐக்கிய முன்னணி அரசின் செயல்பாடுகள் குறித்து மட்டும்தான் பேசப்பட்டது. தேசிய அளவில் ஐ.மு. அரசை நாங்கள் சார்ந்திருக்கும் இடதுசாரி முன்னணி ஆதரிப்பதால் மரியாதை நிமித்தமாக இந்தச் சந்திப்பு நடந்தது. தமிழகத்தில் கூட்டணி அமைப்பது குறித்து அப்போது பேசப்படவில்லை."

# கூட்டணி!

## - கார்த்திக் பரபரப்பு

**அப்படியென்றால் இந்தத் தேர்தலில் யாரோடுதான் உங்கள் கட்சி கூட்டணி வைத்துக்கொள்ளும்?**

"எங்களுக்கு யார் உரிய மரியாதையைக் கொடுக்கிறார்களோ அவர்களோடுதான் கூட்டணி. அப்படி எங்களுக்கு உரிய மரியாதை கொடுக்காவிட்டால் தனியாக நிற்கவும் தயங்கமாட்டோம். கூட்டணி பற்றி எங்கள் கட்சித் தொண்டர்களின் உணர்வுகளைப் புரிந்துகொள்ள நான் சுற்றுப் பயணம் மேற்கொண்டிருக்கிறேன். தொண்டர்களின் உணர்வை மத்திய கமிட்டிக்குத் தெரிவிப்பேன். அவர்கள் இறுதி முடிவை அறிவிப்பார்கள்."

**- ப்ரியன்**

# நீங்கள் கேட்டவை -தராசு

● வி.அரவிந்த், குள்ளனம்பட்டி

? அரசியல் கட்சிகள் கூட்டணி அமைத்திடாமல் தேர்தலைச் சந்திக்க வேண்டும் என்று தேர்தல் கமிஷன் உத்தரவிட்டால்...?

! அவ்வாறு உத்தரவிட முடியாது. சட்டப்படி செல்லாது. ஜனநாயக விரோதமாகிவிடும். அவ்வாறு உத்தரவிடுவது சாத்தியமாயிருந்தாலும் அதனால் பிரச்னைகள், குழப்பம் மிகுமேயொழிய குறையாது. பல சந்தர்ப்பங்களில் வோட்டுகள் சிதறிப் போய் வலுவான ஆட்சி அமைய வாய்ப்பின்றிப் போய்விடும். நல்ல கூட்டணி என்பது எந்த ஒரு கட்சியும் மேலாதிக்கம் செலுத்துவதைத் தவிர்க்க உதவும்.

● ஜி.மாரியப்பன், சின்னமனூர்

? மூன்றாவது டெஸ்டில் படு தோல்வியைக் கண்டுள்ளதே நமது கிரிக்கெட் அணி?

! போனது போச்சு; ஒன் டே மேட்சில் சரிகட்டிடுவாங்கன்னு பார்த்தா, அதிலேயும் முதல் மேட்சில் டெண்டுல்கரின் செஞ்சுரி வீணாப்போயிடுச்சே! எங்கே தப்பு? என்ன கோளாறு? கொஞ்சம் ஆத்ம பரிசோதனையில் ஈடுபட்டா, வியூகம் வகுத்தா, மறுபடி தலை நிமிரலாம்.



• கிடைத்த பதவி...



• ... பெற்ற வரம்!

● ஏ.சுகுமார், காட்பாடி

? டாக்டர் அன்புமணி அமைச்சரான விதம்... ஜி.கே.வாசன் அமைச்சரான விதம்... வித்தியாசம் என்ன?

! கேட்டவுடன் கிடைத்த பதவிக்கும் தவமிருந்து பெற்ற வரத்துக்கும் உள்ள வித்தியாசம்தான்.

● பி.ராஜேஸ்வரி, மதுரை - 16

? முன்பு தனித்துப் போட்டி என்று கூறிய ஜெயலலிதா, இப்போது கூட்டணிக்காக கதவு திறந்தே இருக்கும் என்கிறாரே - தோல்வி பயமா?

! தோல்வி பயம் என்பதைக் காட்டிலும் தேர்தல் தந்திரம் என்று கூறுவதுதான் பொருத்தம். எதிரணியின் அதிருப்தி சலசலப்புகளைச் சாதகமாக்கிக் கொள்வதுடன், மக்கள் மத்தியில் தாம் மிகவும் தாராள மனம் படைத்தவர் என்கிற பிம்பத்தையும் விதைக்க உதவும் இப்பேச்சு.

● எச்.ஆண்டனி தமிழரசன், மும்பை

? கோபி நத்தம் பகுதியில் வீரப்பன் ஆவி உலவுகிறதாமே... உண்மையா?

! வீரப்பனுடன் ஒப்பிட வீரப்பனின் ஆவி குற்றமற்றது. 'வீரப்பன் ஆவி' என்று சொல்லிக்கொண்டு மனிதர்கள் உலவினால்தான் ஆபத்து!

● என்.சண்முகம், திருவண்ணாமலை

? சிம்பு விஷயத்தில் உண்மையில் என்னதான் நடந்தது?

! தாம்பூலத்துக்குப் பாக்கு
தப்பவில்லை சிம்புவின் மூக்கு!
போக்ரோடுல சின்ன வம்பு
சுத்திட்டாரே டி.ஆரும் கம்பு!
பத்தி பத்தியாய்ச் செய்தி வந்துச்சு
பத்திரிகையாளர் சந்திப்பும்
நடந்துச்சு!
மூக்கு உடையலே பார்த்துக்குங்க
தேர்தல் ஸ்டண்டுதான்
தெரிஞ்சுக்கங்க!

ஹூம்... சரவணாவுக்கு பப்ளிஸிட்டி கிடைக்கலியே நினைச்சபடி!

● எம்.பாஸ்கர், திண்டுக்கல்

? ஜார்ஜ் புஷ் இஸ்லாத்தைத் தழுவினால் அவருடைய தவறுகளை அல்லா மன்னித்து விடுவார் என அல்கொய்தா தலைவர் கூறியுள்ளது பற்றி?

! தவறுகளுக்காக வருந்தி திருத்திக் கொள்பவருக்கு எம்மதத்திலும் மன்னிப்பு உண்டு. ஜார்ஜ் புஷ்ஷுக்குச் சொல்லப்

பட்டது அல்கொய்தா பயங்கரவாதிகளுக்கும் பொருந்தும்.

● நெ.பிரஜோற்பத்திகலை, பெருமாத்தூர்

*? கடந்த பதினாறு ஆண்டுகளாக வசித்து வந்த வீட்டைக் காலி செய்து விட்டு, 'பழைய வீட்டு வேப்ப மரத்தில் நிறைய பேய்களை விட்டுச் செல்கிறேன்'*



* மனித ஆபத்து!

# வீரப்பன் ஆவி உலவுவது உண்மையா?

*என்று நிதீஷுக்கு 'எச்சரிக்கை' செய்துள்ளாரே லாலு பிரசாத் யாதவ்?*

! மாட்டுத் தீவன ஊழல் போன்ற பலரக லஞ்ச-ஊழல் பேய்களைப் பழைய வீட்டு வேப்ப மரத்தில் விட்டுவிட்டுப் போய்விடலாம் என்ற லாலுவின் ஆசை நிறைவேறாது. அவர் போகுமிடமெல்லாம் அவை தொடரும்!

● ஜவஹர் எம்.கே., சென்னை-91 ★

*? பகுத்தறிவு பேசும் வீரமணிக்குக் கடவுள் ஏது? இல்லாத கடவுளுக்குக் கோயில் அர்ச்சகர் வேலைக்குக் கோரிக்கை, மறியலா?*

! கடவுளை மறுத்தாலும் கோயில்கள் வழங்கும் வேலைவாய்ப்புகளை அவர்கள் மறுக்கவில்லை. அவற்றில் தலித்துகளுக்கு வாய்ப்பு வேண்டும் என்கிறார்கள்; அந்தப் பணியுடன் அதற்குரிய சமூக அந்தஸ்தும் கிட்டும் என்பது எதிர்பார்ப்பு. கோயில் விஷயத்தில் எந்த ஜாதி என்பதைவிட என்ன தகுதி என்பதுதான் பக்தர்களுக்கு முக்கியம்.

● எஸ்.பி.பாலு, கோடம்பாக்கம்

*? மத்திய அமைச்சர் மணி சங்கர் அய்யர்*



* கடவுள் தரும் வேலை!



* இடம் மாறிய பிரார்த்தனை!

*பெட்ரோலிய துறையிலிருந்து தூக்கப் பட்டது திறமைக் குறைவினாலா?*

! ரொம்ப அதிகமாகத் தமது திறமையைக் காட்ட முயன்றதால் என்று கூறலாம்.



* பிடித்து ஆட்டும் பேய்கள்!



* மிதமிஞ்சிய திறமை!

● ஆர்.பிரகாஷ், திருச்சி - 4

**? விமான நிலையங்களைத் தனியார் வசம் ஒப்படைப்பதால் ஏற்படும் சாதக - பாதகம் என்ன?**

! குத்தகைக்கு விடும்போது மத்திய அரசுக்குக் கணிசமான தொகை கிடைக்கிறது. நிர்வாகப் பொறுப்பு குறைகிறது. ஊழியர்களிடம் பொறுப்புணர்ச்சி அதிகரிக்கிறது. பயணிகளுக்கும் சரக்கு அனுப்புவோருக்கும் நல்ல சேவை கிடைக்கிறது. எந்தத் துறையானாலும் பாதுகாப்பு என்பது அதி முக்கியம். அரசு/ அதிகாரிகள் விழிப்புடன் செயலாற்றுவது அவசியம்.

● லெ.நா.சிவகுமார், சென்னை - 33

**? பிழைக்கத் தெரிந்தவர் கவுண்டமணியா? செந்திலா?**

! சமயம் பார்த்து அரசியலில் புகுந்தால்தான் பிழைக்கத் தெரிந்தவர்னு அர்த்தமா? உங்கள் கேள்வியை, அரசியலில் நேரடியாக ஈடுபடாத ஏராளமானவர்கள் மன்னிப்பார்களாக! பிழைச்சுப் போங்க!

● சோம.தேவராசன், நாச்சியார் கோயில்

**? லாட்டரிச் சீட்டு விற்பனை அனுமதி அறிவிப்புதான் தேர்தலுக்கு முன் ஜெ. அறிவிக்கும் அடுத்த சலுகையாக இருக்கும் என்று நண்பரிடம் பந்தயம் கட்டியுள்ளேன். நான் ஜெயிப்பேனா?**

! 'நாடு தழுவிய அளவில் லாட்டரி சீட்டை மத்திய அரசு தடை செய்ய முன்வர வேண்டும்' என்று அம்மா நழுவ ஆரம்பித்திருப்பதைப் பார்த்தால் நீங்கள் ஜெயித்துவிடுவீர்கள் போல்தான் தோன்றுகிறது. லாட்டரி தொழிலில் ஈடுபட்டிருந்த லட்சக்கணக்கானவர்களின் கோரிக்கை தேர்தல் நெருங்க, வலுப்பெற வாய்ப்புண்டு.

● ஆர்.நாகராஜன், சென்னை

**? பா.ம.க. - ம.தி.மு.க. இரண்டு கட்சிகளில் அதிக இடங்களைக் (கூட்டணி பேரங்களில்) கேட்கும் தகுதியுள்ளது எது?**

! ஏனய்யா, "கல்கியின் கலக புத்தி!" என்று முரசொலி மூலம் கலைஞர் மீண்டும் எங்களைத் தாக்க வேண்டும் என்று உமக்கு ஆசையா?

● கே.வி.ராமன், சென்னை - 73

**? 2002ல் அரசு பணி நீக்கம் செய்த சாலைப் பணியாளர்களுக்கு மூன்று மாதச் சம்பளத்துடன் மீண்டும் வேலையாமே?**

! தேர்தலையொட்டிப் பெருகும் முதல்வரின் 'தயாளத்'தின் இன்னொரு வெளிப்பாடு. வெற்றிக்கு ராஜபாட்டை அமையும் என்று நம்புகிறார் போலும்.

● அ.சுஹைல் ரஹ்மான், திருச்சி - 21

**? மீண்டும் முதலமைச்சர் ஆவதற்கு ஜெயலலிதா தமிழக மக்களிடம் வரம் பெற்றுள்ளதாகச் சொல்கிறாரே காளிமுத்து?**

! முன்பு ஜெயலலிதாவைக் கடவுளாக்கி வரம் கேட்டார்கள்; இப்போது மக்களைக் கடவுளாக்கி 'ஜெ'வுக்கு வரம் வேண்டுகிறார்கள். அந்த மட்டில் நல்ல முன்னேற்றம்தான். ●

❒ ரூ.100 பரிசு பெறுபவர் :
வி.அரவிந்த்,
பிளாட் எண் 220,
கதவு எண் 1/824, எஸ்.எஸ். நகர்,
குள்ளனம்பட்டி,
திண்டுக்கல் - 624 003

★ ரூ.50 பரிசு பெறுபவர் :
ஜவகர் எம்.கே.,
சி1, முதல் தளம், 'பி' பிளாக், 19,
நியூ சந்திரா ஃபிளாட்ஸ், மூன்றாவது தெரு, முதல் பிரதான சாலை,
சதாசிவம் நகர் வடக்கு,
சென்னை - 600 091.

# சின்ன ஜோக், பெரிய பரிசு!

# போட்டி முடிவு-4



'ஹீரோயின் ஜோக்ஸ்' எழுதுங்க என்று சொன்னதுதான் தாமதம், வாசகர்கள் ஹீரோக்களாகவே மாறிவிட்டனர். வந்து கொட்டிய ஏராளமான ஜோக்குகளில் பெஸ்ட் ஜோக்கை அலசி ஆராய்ந்து தேர்ந்தெடுப்பதற்குள் போதும் போதும் என்றாகிவிட்டது.

**தூத்துக்குடி மெட்டல்ஸ், சென்னை - வழங்கும் 'ப்ரீத்தி மிக்ஸி' பரிசாகப் பெறும் ஜோக்:**

*''நம்ம ஹீரோயினோட தாய்மொழி எது?''*

*''டப்பிங்!''*

*- அம்பை தேவா*

**பிரசுரத்துக்குத் தேர்வான ஜோக்குகள்...**

''சார், 'பூஜாஸ்ரீ' உங்க மனைவிதானே... கால்ஷீட் கொடுக்கச் சொல்லக் கூடாதா? ஆறு மாசமா அலையறேனே!''

''விவரம் புரியாம பேசாதீங்க சார்! நானே அவங்ககிட்டே பேச ஒரு வருஷமா கால்ஷீட் கேட்டுக்கிட்டிருக்கேன்.''

- மு. இராமச்சந்திரன்

●●

''அந்த புது ஹீரோயினை ஏன் படத்துல இருந்து நீக்கிட்டாங்க?''

''அவங்களுக்குச் சொந்த ஊர் தமிழ்நாடுன்னு டைரக்டருக்குத் தெரிஞ்சு போச்சாம்!''

- எஸ். பழனிவேலு

●●

''அந்த நடிகை ரொம்ப பந்தா பேர் வழி...''

''எப்படி?''

''இன்கம்டாக்ஸ் எல்லாம் நானா போய் கட்டறது இல்லே! அவங்களா வந்து தேடி எடுத்துட்டுப் போவாங்கன்னு சொல்றாங்களே!''

- தே. ராஜாசிங் ஜெயக்குமார்

●●

''நிஜ வாழ்க்கையில எனக்கு நடிக்கவே தெரியாது...''

''அதுல கூடவா...!''

- ஜி. வெங்கட்ராமன்

●●

''லோ பட்ஜெட் படமா, ஹை பட்ஜெட் படமான்னு எப்படித் தெரிஞ்சுக்கறது?''

''ஹீரோயின் குடிக்க மட்டும் மினரல் வாட்டர் வாங்கிக் கொடுத்தா அது லோ பட்ஜெட். ஹீரோயின் குளிக்கவே மினரல் வாட்டர் வாங்கினா அது ஹை பட்ஜெட்!''

- ஆர். ராஜதுரை

●●

''அந்த நடிகை நவரச நாயகியாமே. அவ்வளவு நல்லா நடிப்பாங்களா?''

''அதெல்லாம் இல்ல. ஒரு நாள் ஷூட்டிங் முடியறதுக்குள்ள எல்லாவித பழரசமும் கேப்பாங்க.''

- ஆர். நாகராஜன்



# நந்தா மாலினியின் நாதம்!

சிங்கள இசைக் கலைஞர் விஷாரதா நந்தா மாலினியிடம் எளிமை ஏராளம்; இனிமை மிதம். அவர் அந்த இதமான, மிதமான இசையால்தான் கேட்பவர்களின் உள்ளத்தை அள்ளுகிறார் போலும்! ஸ்ரீலங்கா தூதரகம் ஏற்பாடு செய்திருந்த 'நாத சித்தம் - இலங்கையின் குரல்' என்ற நந்தா மாலினியின் தனி இசை நிகழ்ச்சி பழமையும், அதன் தனிப்பட்ட எழிலும் உள்ள சென்னை மியூஸியம் தியேட்டரில் அண்மையில் நடந்தது.

நந்தா மாலினியின் பாடல்கள் எல்லாம் சிங்களத்தில்தான். இசைக்கு மொழி தேவையில்லைதான். ஆனாலும், நமக்கு இவ்வளவு அருகில் உள்ள ஸ்ரீலங்காவின் மொழியென்னவோ கிரேக்கமாக இருப்பது ஆச்சரியம்தான். மிகக் குறைவான பக்க வாத்தியங்கள்: ஒரு வயலின் (கலானி பெரிரா); தபலா (கருணாரத்னே ஜயசிங்கே) மற்றும் கீ போர்ட் (சரத் டி ஆல்விஸ்) இவ்வளவே.

நந்தா மாலினியின் எளிமையான இசை, அவருக்குப் பல விருதுகளை வாங்கித் தந்திருக்கிறது. உலகெங்கும் ஒலித்திருக்கிறது. அன்று அவர் பாடிய இருபது பாடல்கள் பல வகையானவை; புத்த பிரான் அஞ்சலி, தாய் மண்ணுக்கு, இயற்கைக்கு, தாய்மைக்கு, காதலுக்கு, தனிமைக்கு, குழந்தைகளுக்கு என்று பல வகைப் பாடல்கள். 'தாரகைகள் ஒளிரும் நீண்ட இரவில் நான் கண் விழித்திருக்கிறேன். உலகம் உறங்குகிறது. உல்லாசமான பழைய காதல் நினைவுகள் என்னைத் துரத்துகின்றன. அந்த நினைவின் வியப்பில் பல கவிதைகளைக் கிறுக்குகிறேன்' என்ற ரோஹன வீரசிங்கேயின் 'தாருதா நிதான மாஹேரே' என்ற பாடல் வரிகளுக்கும், மற்ற பல பாடல்களுக்கும் இசை சேர்த்திருப்பவர் பேராசிரியர் அனில் ஆரியரத்னே. பாடல்கள் தீவிரமான சாஸ்திரிய சங்கீதமல்ல. மெல்லிசைதான். நமக்குப் பரிச்சயமான பல தமிழ், இந்தி, மலையாள திரைப்படப் பாடல்களின் தாக்கத்தை அநேகமாக எல்லாப் பாடல்களிலுமே உணர முடிந்தது. 'அம்மா வருணே' என்ற பாடல் சற்று உணர்ச்சிபூர்வமாக இருந்ததென்றால், தமிழில் நந்தா மாலினி மிழற்றிய 'ஆராரோ' லேசாகப் புன்னகை செய்ய வைத்தது.

இரைச்சல் இல்லாத சங்கீதம்தான்; ஆனால் கனமில்லாததால் காற்றில் கரையும் கற்பூர மணம்போல் லேசாகத் தொட்டுத்தான் சென்றது.

- ஜோதி ஸ்வரூபிணி

* நந்தா மாலினி


• அரசு பொது மருத்துவமனை

# பூத்துக் குலுங்கும் பூங்கா நகர்!

அரசு பொது மருத்துவமனை, சென்ட்ரல் ரயில் நிலையம், ரிப்பன் மாளிகை, நேரு ஸ்டேடியம் போன்ற சென்னையின் மிக முக்கிய அடையாளங்கள் எல்லாம் பூங்கா நகர் தொகுதியின் அங்கங்கள்தான். இதன் சட்டமன்ற உறுப்பினர், சில மாதங்களுக்கு முன்பு தமிழகத்தில் ஒரு பொலிட்டிகல் ட்விஸ்டை ஏற்படுத்திய எஸ்.ஜி. விநாயகமூர்த்தி. இது தவிர திரைப்படக் கலைஞர் டி.ராஜேந்தர் எம்.எல்.ஏவாக இருந்த தொகுதியும் கூட.

வட இந்தியர்கள், யாதவர்கள், தாழ்த்தப்பட்டவர்கள் அதிகம் வசிக்கும் இந்தத் தொகுதியில் அனைத்துத் தரப்பு மக்களும் கலந்துகட்டி வசிப்பது இந்தொகுதியின் சிறப்பு. சென்னை மாநகராட்சி வார்டுகளான 41 முதல் 49 வரையிலானவை இத்தொகுதிக்குள் வருகின்றன. இவற்றில் நான்கு தி.மு.க. வசமும், 3 அ.தி.மு.க. வசமும், 2 காங்கிரஸ் வசமும் உள்ளன.

ஏறக்குறைய ஒன்றரை லட்சம் வாக்காளர்களைக் கொண்ட இந்தத் தொகுதியில் கடந்த முறை பதிவான வாக்குகள் வெறும் 64,268 மட்டுமே... அப்போது தன்னை தி.மு.க சார்பில் எதிர்த்துப் போட்டியிட்ட டி.ராஜேந்தரை 6377 வாக்குகள் வித்தியாசத்தில் வென்றார் காங்கிரஸை சேர்ந்த எஸ்.ஜி. விநாயகமூர்த்தி.

"பூங்கா நகர் என்பது வெறும் பெயரளவிலேயே இருந்தது. நான் வந்த பிறகு, அதை உண்மையான பூங்கா நகராக மாற்ற பல்வேறு நடவடிக்கைகளை மேற்கொண்டேன் என்பது என் தொகுதி மக்களுக்கு நன்றாகவே தெரியும். சட்டமன்ற உறுப்பினர் அலுவலகத்துக்கு விடுமுறை நாட்கள் தவிர அனைத்து நாட்களிலும் இரு வேளைகளும் வந்து மக்களிடம் குறைகளைப் பெற்று, அதை நிவர்த்தி செய்யக் கூடிய எம்.எல்.ஏ நான். என்னுடைய பதவிக் காலத்தில் ஒரு கோடி ரூபாய்க்கு மேல் குடிசைப்பகுதி மேம்பாட்டுப் பணிகளுக்காக ஒதுக்கீடு செய்துள்ளேன். இதை என்றென்றும் மக்கள் நினைவில் வைத்திருப்பார்கள். 104 கோடி ரூபாய் செலவில் கட்டப்பட்ட அரசு பொது

• விநாயக மூர்த்தி



தொகுதி விசிட்-4

மருத்துவமனைக்கு, ரூபாய் ஒன்றரை கோடிக்கு மேல் ஒதுக்கீடு செய்து மருத்துவமனை வளாகம், பெண்கள் விடுதி, நவீன சமையலறை உள்ளிட்டவற்றைச் செய்து கொடுத்தேன். இதில் முக்கியமான விஷயம் இந்தப் பகுதியில் வாக்காளர்களே கிடையாது. இதில் பயனாளிகள் பெரும்பாலும் பொதுமக்களே'' என்று கூறுகிறார் விநாயகமூர்த்தி. சரி, தொகுதி மக்கள் என்ன சொல்கிறார்கள்.

**தேவராஜன் (தி.மு.க. பகுதி செயலாளர்) :**

"இந்தத் தொகுதி எம்.எல்.ஏ நல்லவர். கடுமையான உழைப்பாளி. சாலை வசதி, தண்ணீர் வசதி, குடிசைப்பகுதி மேம்பாடு என்று அனைத்துப் பணிகளையும் நன்றாகவே செய்து தந்துள்ளார். இங்கு இருக்கும் அரசு பொது மருத்துவமனை கூட தி.மு.க. ஆட்சியில் நிதி ஒதுக்கீடு செய்யப்பட்டு, அடிக்கல் நாட்டப்பட்டது என்பதை ஜெயலலிதா முன்னால் பேசக்கூடாது என்று தடுக்கப்பட்டுவிட்டதால் விநாயகமூர்த்தி அதைப் பேசவில்லை. 'ஜெ'வைப் புகழும்படி நிர்ப்பந்திக்கப்பட்டார் என்றே கருதுகிறேன். இருந்த போதிலும் வரும் சட்டமன்ற தேர்தலில் இந்தத் தொகுதி தி.மு.கவுக்கே ஒதுக்கப்படும். 1977-ல் இருந்து தொடர்ந்து இந்தத் தொகுதி தி.மு.கவின் கோட்டை. ஒரு வேளை எங்களை எதிர்த்து டி.ராஜேந்தர் போட்டியிட்டால் எங்கள் சார்பில் போஸ்டர் ஒட்டுபவர் கூட அவரை மண்ணைக் கவ்வ வைத்துவிடுவார்.

**மணிபால் (காங்கிரஸ் கவுன்சிலர்):**

"எங்க எம்.எல்.ஏவுக்கு வயசு தான் எண்பத்தியிரண்டே தவிர தன்னோட தொகுதி மக்களுக்காக எந்த இடத்துக்கும் ஏறி


• தேவராஜன்


• பிரதாப்குமார்


• மணிபால்


• ராமகிருஷ்ணன்


• பாபு

இறங்கிடுவாரு. அதுக்குக் காரணம் பதினைந்து வருஷத்துக்கு மேல கவுன்சிலரா இருந்த அனுபவம். சேரிப்பகுதியில் இருக்குற ஜனங்களுக்கு வெள்ள நிவாரணம் வாங்கித் தர்றதுக்காக கவுன்சிலர்களைக் கூட்டிக்கிட்டு, கமிஷனரு, கலெக்டரு, மந்திரி அனிதா ராதாகிருஷ்ணன் எல்லாரையும் பலமுறை பார்த்ததை மறக்க முடியாது.''

**பிரதாப்குமார் (சென்னை மாநகராட்சி மண்டலக்குழு தலைவர்) :**

சென்னையைப் பொறுத்த மட்டில் ஒரு எம்.எல்.ஏவின் பங்கு என்பது மிகவும் குறைவு. காரணம் 600 - 700 கோடி வரை மாநகராட்சி சார்பாக பட்ஜெட் போடப்பட்டு திட்டங்கள் MP, MLA, MC என அனைவரது நிதியிலிருந்தும் பிரிக்கப்படுகின்றன. சென்னை மாநகராட்சிக்குள் இப்போது நிறைய அ.தி.மு.க.வினர் கவுன்சிலர்களுடன் சென்றுள்ளதால், எங்களது பணிகள் மக்களுக்குத் தெரிய ஆரம்பித்துள்ளன. அம்மா கொடுத்த 2000 ரூபாய் வெள்ள நிவாரணம், இலவச சைக்கிள்கள், பாடப்புத்தகங்கள் எல்லாம் தொகுதி மக்களிடம் அ.தி.மு.க. ஆதரவு தளத்தை விரிவுபடுத்தியுள்ளன. எனவே இந்தத் தொகுதி அ.தி.மு.க. தொகுதியாக விரைவில் மாறும். எம்.எல்.ஏ. விநாயகமூர்த்தி நல்ல மனிதர். வார்டு குழு கூட்டத்தில் கூட கட்டாயம் கலந்துகொண்டு தொகுதி நலத் திட்டங்கள் குறித்து கருத்துத் தெரிவிப்பார் ஆனால் அ.தி.மு.க. வார்டுகளுக்கு ஏனோ நிதி ஒதுக்கீடு செய்யவே இல்லை.''

**ராமகிருஷ்ணன் (மருத்துவர்):**

"இந்தத் தொகுதியில் கடந்த 44 வருஷமா இருக்கேன்.. பிரச்னைன்னு பாத்தீங்கனா,

சால்ட் குவார்ட்டர்ஸ் ஏரியால ஏகப்பட்ட வெளி மாநில லாரிங்க வந்து நிற்கும். ஆனா அதுல வர்ற டிரைவர், கிளீனர்களுக்கு தங்க இடம், கழிவறை, குளியலறை எதுவும் இல்லை. அதனால அந்த ஆளுங்க ரோட்டுலதான் எல்லாமே செய்யணும். இதனால் பொது மக்களுக்கு பெரிய இடைஞ்சல். இதுக்கு ஒரு வழி பண்ணணும். எம்.எல்.ஏ. வயசானவரு. அதனால அவரால மழை, வெள்ளம்னா அவசரமா வந்து பார்க்க முடியாது. போன வெள்ளத்தின்போது கூட தயாநிதி மாறன்தான் வந்தாரு. இவரு தண்ணீர் வடிஞ்ச பிறகு தான் வந்தாரு."

* டி.ராஜேந்தர்



பாபு (பெட்டிக்கடை வியாபாரி) :

"இந்த ஆட்சியும் நல்லாவே இருக்கு. எம்.எல்.ஏ.வும் நல்லா ஒர்க் பண்ணியிருக்காரு. ஆனாலும் டி.ராஜேந்தர் மாதிரி ஒரு வேகமான எம்.எல்.ஏ. கிடைக்கிறது சிரமங்க!"

பூங்கா நகரைப் பொறுத்தவரை சிட்டிங் எம்.எல்.ஏவுக்கு நல்ல மதிப்பு இருக்கிறது. ஆனாலும் இந்த முறை தி.மு.க. கூட்டணியில் தொகுதி தி.மு.கவுக்கு ஒதுக்கப்படும் என்றே தெரிகிறது. தி.மு.க சார்பில் ரகுமான்கான், தேவராஜன் உள்ளிட்டோரும், அ.தி.மு.க. சார்பில் பிரதாப்குமாரும், தொகுதி மாறும் நிலையில் உள்ள சேகர்பாபுவும் களமிறங்கலாம் என்று பேச்சிருக்கிறது. ஒருவேளை மீண்டும் காங்கிரஸுக்கே ஒதுக்கப்பட்டால் கவுன்சிலர் மணிபால் சீட்டு வாங்கும் முயற்சியில் ஈடுபட்டுள்ளார். அத்தனையும் தாண்டி டி.ராஜேந்தர் இரட்டை இலை சின்னத்தில் களம் காணவும் வாய்ப்பு உள்ளது.

- **இரா. முத்துக்குமார்**

படங்கள் : **ராஜன்**

ஹரித்வாரத்து கங்கை. ஆங்காங்கே அனேக சன்யாசிகள் அள்ளி அள்ளி அர்க்யம் விட்டபடி மார்பளவுத் தண்ணீரில் நின்று கொண்டிருந்தார்கள். குளிர் அவர்களிடம் குளிர் காய்ந்து கொண்டிருந்தது. ஆனால் சாருவுக்கு உதறல் எடுத்தது. அதே சமயம் மொத்த சரீரமும் ஒரு ரசாயன மாற்றமடைந்தாற்போல உணர்ந்தாள். நடுங்கினாலும் மனசின் திடத்தோடு சம்பத்தின் கையைப் பற்றிக் கொண்டு மூழ்கி எழுந்தாள்.

இருவருமே ஈரம் சொட்டச் சொட்ட கரை ஏறியபோது, அந்தக் கரை வெளியில் ஒரு டெம்போ வேன் வந்து நிற்க, அதில் இருந்து சொல்லி வைத்த மாதிரி இருபத்தியொரு சன்யாசிகள் இறங்கினார்கள். அவர்களை பிரதட்சணமாகத்தான் கடக்க வேண்டி வந்தது. சம்பத் அவர்களை எண்ணிப் பார்த்துவிட்டு வியந்தவனாக சாருவைப் பார்த்தான்.

"என்னன்னா... இவாளை சேவிப்போங்கறேளா?"

"ஆமாம்... அப்பா, அம்மா பரிகாரம் பண்ணியிருந்தாலும் நாமளும் பண்றதுல தப்பு இல்லையே..."

"நீங்க எது சொன்னாலும் சரி, எது செய்தாலும் சரி..." என்றவளுக்குத் திரும்பவும் வயிற்றில் சங்கடம். அதைச் சமாளித்தபடியே அவர்களுக்கு வந்தனம் செய்ய இருவரும் தயாரானார்கள்.

ஹரித்வார் அளவுக்கு வாரணாசி கங்கையிடம் அத்தனை சுத்தமில்லை. ஆனால் வேகம் அதிகம். ஒருபுறம் முழுக்கக் கருங்கல் படிகளால் அமையப்பெற்ற படித்துறைகள்.

ஒரு படித்துறை மேல் கண்ணன், கூடவே கணேஷின் அப்பா! இருவரும் முழங்கால் தண்ணீரில் நின்றபடி இருந்தனர். கணேஷின் அப்பா அமைதியாக ஒரு சிறு சலனமும் இன்றி அந்தத் தண்ணீர்க் காட்டை பார்த்தபடி இருந்தார். கண்ணன் அவரைப் பார்த்து "முங்கு போடவாமா?" என்று கேட்டான். அவர் மறுக்கவுமில்லை... ஆமோதிக்கவுமில்லை...

"என்னைப் பாருங்க... நான் செய்யற மாதிரியே செய்யுங்க. ஓர் உயிரோட பயணத்துல உச்சபட்சமான பிறப்புதான் இந்த மனிதப் பிறப்பு. இந்தப் பிறப்புலதான் ஐந்தாலான இந்த உடம்புக்குள்ள ஆறாலான அறிவு, ஏழாலான சப்தத்தை வெளிக்காட்டி செயல்படுது. அந்தச் சப்தத்தை எண்ணம், நினைப்பு, அமைதி இல்லாத தன்மைன்னு எப்படி வேணும்னா சொல்லலாம். அதுதான் துக்கமா, சந்தோஷமா மாறுது. கடற்கரையோரத்து மண்ணுல எப்படி வேணா வடிவங்களை உருவாக்கலாம் இல்லையா? அந்த மணல் வெளி மாதிரிதான் மனசு. அதுல உருவாகற இன்பதுன்பங்களுக்கு நிலையான்



தன்மை கிடையாது. எந்த வடிவமும் இல்லாத பரந்த மணல்வெளியா மனசையும் வெச்சுக்கணும். இந்த வெளி மேல பாவம்கற நிறைய குப்பை கூளங்கள் படிஞ்சு இருக்கலாம். இப்ப நாம கங்கைல மூழ்கும்போது இந்த வெள்ளம் அந்த வெளில பாய்ஞ்சு அவ்வளவு குப்பை கூளமும் இந்த ஜலத்தோடயே போயிடும். போயிடுச்சுன்னு நினைச்சுக்கிட்டே மூழ்கி எழுந்தா கட்டாயம் போயிடும்... இதுல எல்லாமா அது போயிடும்னு நினைச்சு சந்தேகத்தோட மூழ்கினா அதுபோகவே போகாது.

கங்கை முழுக்குல சங்கல்பமும் பரிபூரண நம்பிக்கையும் ரொம்ப ரொம்ப முக்கியம். என்ன நான் சொல்றது புரியுதா?"

கண்ணன் எதற்காக அப்படி ஒரு நீண்ட வியாக்யானம் செய்தான் என்று தெரியவில்லை. அவரோ ஆமோதிப்பாகத் தலையை அசைத்தார். அதன்பின் கண்ணன் நீரை கைகளில் அள்ளித் திரும்ப கங்கையிலேயே மூன்று முறை விட்டான். அவரும் அப்படியே செய்தார். பின் தலையில் மூன்று முறை மழை நீர் போல தெளித்துக் கொண்டான். அவரும் அப்படியே செய்து கொண்டார். பின்னர் அவர் கரத்தை இழுத்துப் பற்றினான். அவரிடம் அப்போதே ஒருவித பரவசம்... இனம் புரியாத மாற்றம்... 'உம்... மூழ்கலாம்..." என்றவன், "கங்கம்மா, கண்ணன் வந்துருக்கேன்..." என்று அந்த நீரையே ஒரு உறவுப் பெண் போல கருதிச் சொன்னபடி ஒன்று, இரண்டு, மூன்று என்று மூழ்கி எழுந்தான். அவரும் அவனைத் தொடர்ந்தார். அந்த நொடிகளில் அந்த நீர்வெளிமேல் ஒரு வானவில் ஊடுருவியது போல எல்லோருமே உணர்ந்ததுதான் ஆச்சரியம்.

தட்டுத்தடுமாறி நடுங்கிக் கொண்டிருந்த வயதான உடம்புகள் கூட சட்டென்று ஒரு

# எங்கே என் கண்ணன்?



உறுதிக்கு வந்துவிட்டது போல இருந்தன.

சுவாமிநாதன் கண்ணனை ஒரு புதிய மனிதனைப் போல பார்த்தார். தலையில் இருந்து நீர் ஒழுகி மூக்கு முன்னால் புல்லாக்கு போல சொட்டியபடி இருந்தது.

கண்ணனிடம் அவனுக்கேயுண்டான அந்த பிரத்யேக சிரிப்பு.

"என்ன ஸ்வாமி... மனகல இதுவரை இருந்த அடப்பம் நீங்கி, சீரா எல்லாம் ஞாபகத்துக்கு வருதா?"

"அ...அ...ஆமாம். நீங்கோ?"

"கண்ணன் என் பேர். உங்க பேர்...?"

"சு...சு...சுவாமிநாதன்!"

"கொஞ்ச காலமா பைத்தியமா இருந்து எல்லாரையும் படுத்தின நாதனும் கூட...."

"அது– அது– ஆமா! அது சரி... ஆங் இங்க நான் எப்படி? இது எந்த இடம்?"

"அடேங்கப்பா... புத்தி தெளிஞ்ச உடனேயே எத்தனை கேள்விகள். வாங்கோ சொல்றேன்..."

"நீங்க... நீங்க யார்?"

"அதான் சொன்னேனே கண்ணன்னு. உங்க பையனுக்கு உதவி செய்ய வந்தவன்..."

"பையன்... பையன்... க...கணேஷ்... க்ணேஷுக்கா!"

"ஆமாம்... இது காசி. இது கங்கை. இப்ப நீங்க மகா மகா புண்யர். உங்களுக்கு குணமாயாச்சு. இனி நீங்க உங்க குடும்பத்தோட போய் நிம்மதியா சேரலாம்."

"நீங்க... நீங்க டாக்டரா? எனக்கு எப்படி, குணமாச்சு?"

அவர் கேட்க, பதிலுக்கு கண்ணன் படித்துறை கற்படிமேல் நின்று கொண்டு கங்கையைப் பார்த்தான்.

"நான் டாக்டர் மாதிரி... ஆனா உங்கவரைல இதோ இந்த கங்கம்மாதான் டாக்டர். கர்மத்துக்கு மருந்தும் டானிக்கும் இவதான். வாங்க போகலாம். உங்க பையனைப் பார்க்க வேண்டாமா?"

கண்ணன் அவரது கைகளைப் பற்றி இழுத்துக்கொண்டே போனான்.

கணேஷ் கைகளில் அந்த மரப்பாச்சி கண்ணன். உற்றுப் பார்த்தபடியே அமர்ந்திருந்தான். பக்கத்தில் பூக்கூடையில் ஏராளமான உதிரிப்பூக்கள். அன்றைய பூஜைக்காக அமர்ந்திருந்தவனிடம் ஒரு சிறு மாற்றம். அனுராதாவும் அதைக் கவனித்தபடியே இருந்தாள்.

"என்ன கணேஷ்... நடக்கற ஒவ்வொரு சம்பவத்துலயும் ஒரு அப்நார்மல் தெரியறதால உங்களுக்குள்ள ஒரு புது நம்பிக்கையா?"

"இல்ல அனுராதா... என்கிட்ட இப்ப இருக்கறது குழப்பம். இதை நம்பிக்கைன்னு சொல்ல முடியாது..."

"உங்கப்பாவோட அந்த கண்ணன் வந்த பிறகுமா?"

"அந்த கண்ணனோட செயல்கள்ல நான் ஒரு வேகத்தைப் பாக்கறேன். கூடவே ஒருவித மர்மமான புத்திசாலித்தனம்..."

"அப்ப இந்த மரப்பாச்சி கண்ணனை உத்துப் பார்க்கக் காரணம்?"

"எனக்குச் சொல்லத் தெரியல... இந்த பொம்மைக்கு நான் பலதடவை பூஜை செய்துட்டதை எதோட சேக்கறதுன்னும் தெரியல. இங்க நடந்துட்டிருக்கிற சம்பவங்களுக்கெல்லாம் ஒரு விடை இருக்கறதா நான் நினைக்கறேன்."

"ரொம்பக் குழப்பறீங்களே?"

"கரெக்ட்... என்னோட இப்போதைய மனநிலையும் அதுதானே?"

"குழம்பு குழம்பு... நல்லா குழம்பு... எவ்வளவு குழம்பறோமோ அவ்வளவுக் கவ்வளவு தெளிவு பிறக்கும்."

என்று ஒரு குரல் இடையிட, கணேஷும் திரும்பினான். கண்ணன்தான்! கூடவே தெளிவான பார்வை மற்றும் முகபாவங்களோடு சுவாமிநாதன்.

"கணேசா..." என்றார் அவரும்.

"அப்பா...!"

"என்னடா... எப்படி இருக்கே?" - அவர் கணேஷை நெருங்கிக் கட்டிக் கொள்ளாத குறை.

"அப்பா நான் உங்களைக் கேக்

காதல் தனிமை தேடுற விஷயமா எனக்குப் படலை. பெற்றோரை ஏமாத்திட்டு எந்தக் காதலும் செழிச்சுடாது. அதே நேரத்துல உண்மையான நேசிப்பைச் சமூகம் ஏத்துக்கலைன்னா, தலைகுனிய வேண்டியது சமூகம் தானே தவிர, காதலர்கள் இல்லை.

- நல்லி குப்புசாமி



கணும். நீங்க எப்படி இருக்கீங்க?"

"பார்த்தா தெரியல... நான் இப்ப பைத்தியக்கார சுவாமிநாதன் இல்லை. உன் நண்பனால குணமாயிட்ட சுவாமி நாதன். காசி வரணும், கங்கைல நீராடணும்கற தெல்லாம் என் கனவு. அது எனக்கே தெரியாம ஈடேறி இருக்கு. எல்லாமே கனவு மாதிரி இருக்குப்பா."

"ஆமாம்பா... உங்க விஷயம் என்வரைல பி.சி. சர்க்கார்ங்கற மேஜிக் நிபுணர் பண்ற மேஜிக்கை விட பெருசா இருக்கு..." என்ற கணேஷ் அந்த மரப்பாச்சி பொம்மையை அவரோடு பேசும்போது தன் மடிமேல் வைத்து விட்டிருந்தான். அது அப்படியே ஒரு முழு மனிதன் அவன் மடிமேல் படுத்திருப்பது போல திடீரென்று கனக்கத் தொடங்கியது. ஒரு விநாடி அந்தக் கண்ணன் அப்படியே அவன் மடிமேல் கிடக்கிற மாதிரி கூட கணேஷுக்குத் தெரிந்தது.

"என்ன கண்ணன் இது, என் மடிமேல போய் படுத்துக்கிட்டு..." என்று கையிரண்டையும் பின்னால் ஊன்றியபடி அவனைச் சுமக்கின்ற பாரத்தோடு கத்தவும், அனுராதா அதிர்ச்சியோடு பார்த்தாள். அவளுக்கும் சரி, சுவாமிநாதனுக்கும் சரி மடிமேல் மரப்பாச்சி கண்ணன்தான் தெரிந்தான்.

"என்னப்பா சொல்றே... உன் மடிமேல பொம்மைல்ல கிடக்கு..." என்றவர் அதை கையில் எடுக்க, பொசுக்கென்று அது அவர் கைக்கு வர, அவனும் பாரம் நீங்கி விட்டது போல உணர்ந்தான்.

திரும்பவும் அவனிடம் குழப்பம். தலையை சரக் காக்கை போல உதறிக் கொண்டான்.

"என்னப்பா நான் பாட்டும் இங்க இருக்கேன். நீ என்னமோ நான் உன் மடிமேல கிடக்கறதா பெனாத்தறே... என்ன ஆச்சு? கால்லதான் சுளுக்கு... மனசுக்கு என்ன?" என்று கண்ணனும் தன் துணிப் பையைத் தேடி எடுத்து அதைத் திறந்தபடியே கேட்டான்.

கணேஷுக்கு என்ன சொல்வதென்றே தெரியவில்லை. அப்போது செல்போன் சிணுங்கி அந்தச் சூழலின் போக்கைக் கலைத்தது.

ஹரித்வாரிலிருந்து டாக்டர் பேசினார்.

"மிஸ்டர் கணேஷ்... இன்னிக்கு பூஜை முடிஞ்சுதா...?"

இந்த உலகம் இன்னும் உயிர்ப் போடு இருப்பதற்கு காதலும் ஒரு முக்கியக் காரணம். எனவே போற்றாவிட்டாலும் அதைத் தூற்றாமல் இருக்கப் பழகுவோம்.

**- ஷ்யாம்**

தொகுப்பு : **செந்தில்**

படங்கள் : **ஸ்ரீஹரி**



"ஆமாம்... இல்ல... இனிதான் பண்ணப் போறேன்."

"நல்லது... இன்னியோட உங்க பூஜைக்கும் ஒரு முற்றுப்புள்ளி விழப்போகுது. இங்க மிஸ்டர் ஸ்ரீனிவாசனோட சன் மிஸ்டர் சம்பத்குமார் வந்துட்டார். அவர் இப்ப வாரணாசிக்குக் கிளம்பிட்டார். உங்க செல் நம்பர் அவர்கிட்ட இருக்கு. அங்க வந்தவுடனேயே காண்டாக்ட் பண்ணுவார். அவர்கிட்ட நீங்க அந்த மூங்கில் பெட்டியை அந்த மரப்பாச்சி கண்ணனோட ஒப்படைச்சிடலாம். அட்வான்ஸா உங்களுக்கு நாங்க எங்க நன்றிகளைத் தெரிவிச்சுக்கறோம்..."

"நோமென்ஷன் சார்..."

"தேங்க்யூ... நான் அப்புறமா பேசறேன்..."

"நல்லது சார்..." - கணேஷ் போனை ஆஃப் செய்துவிட்டு நிமிர, சுவாமிநாதன் மரப்பாச்சி கண்ணனை மூங்கில் பெட்டி பட்டுத்துணிக்குள் வைத்தபடி இருந்தார். அப்படியே "கணேஷ்... நீயா பூஜை செய்தே... அங்க உங்கம்மாவும் நானும் சொல்லியும் கேக்காத நீயா பூஜை செய்துருக்கே. இந்தப் புண்ணியம்தான் என் புத்தியைத் தெளிவிச்சிருக்கு போல..." என்றார். ஆனால் கண்ணன் சட்டென்று பரபரத்தான்.

"சுவாமிநாதன்... உங்க ஊருக்குக் கிளம்பத் தயாராகுங்க. உங்களை உங்க மனைவிகிட்ட ஒப்படைச்சுட்டு அப்படியே உங்க பெண்கள் விவகாரத்தையும் கவனிக்கணும். உம் சீக்கிரம் கிளம்புங்க. கிளம்புங்க..." என்றான்.

அனுராதாவும் கணேஷும் அடுத்த கட்ட இன்ப அதிர்வுக்கு ஆளாயினர்.

(தொடரும்)



# என்னாச்சு பொன்னையனுக்கு?

**சு**மார் பதினான்கு ஆண்டுகள் ஆக்டிவ் அரசியலிலிருந்து ஒதுங்கி இருந்தவர் பொன்னையன். அப்படிப்பட்ட பொன்னையன் 2001 சட்டமன்ற தேர்தலுக்கு முன்னர் ஜெ.வுடைய நம்பிக்கையைப் பெற்றது, அவரது வாழ்க்கையில் ஒரு திருப்பம். தேர்தலில் வெற்றி பெற்ற ஜெ., பொன்னையனை நிதியமைச்சராக நியமித்தார். அவரது கிராஃப் ஏறத் துவங்கியது. சட்டமன்ற அவை முன்னவராகவும் நியமிக்கப்பட்டார்.

கிட்டத்தட்ட 2004 பாராளுமன்ற தேர்தல்வரை மற்ற அமைச்சர்கள் 'நிதி'க்கு மட்டும் தனி மரியாதை கொடுத்தார்கள். மூத்த ஐ.ஏ.எஸ். அதிகாரிகள்கூட நிதியமைச்சருக்குப் பயந்து நடந்தனர். அரசு ஊழியர் விவகாரத்தில் மிகப்பெரிய கெடுபிடிகளை உருவாக்கி அவர்களுக்கும் முதல்வருக்கும் பெரிய இடைவெளியை உண்டாக்கியவர் பொன்னையன்தான் என்று சொல்கிறார்கள்.

இதுதவிர, தலைமைச் செயலாளராக இப்போது இருக்கும் நாராயணன் நிதித்துறைச் செயலாளராக இருந்தபோது, பல விவகாரங்களில் இருவருக்கும் முட்டல் மோதல். கராத்தே விவகாரத்தில் பொன்னையன் அவரை ஆதரித்து நிற்க, அதிகாரிகள் வட்டம் ஒன்று திரண்டு ஆணையாளர் பக்கம் நிற்க, இறுதியில் ஆணையாளருக்காக வளைந்து கொடுத்துவிட்டார் ஜெ. என்றெல்லாம் செய்திகள். இதனால் பொன்னையனுக்குக் கொஞ்சம் வருத்தம்தான். அரசின் பெரும்பாலான முடிவுகள் நிதித்துறையின் ஒப்புதலைப் பெற்றே நடைபெறுகின்றன. அந்த வகையில் சிறுசேரி நில விவகாரத்தில் பொன்னையன் தம்மை மாட்டிவிட்டார் என்று முதல்வர் நினைக்கிறாராம். இப்போது நிலத்தை வாங்கியவர், கொடுக்கமாட்டேன் என்று சொல்லிவிட, மற்ற விவகாரங்களில் அதிரடி பதில் தரும் ஜெ., இந்த விவகாரத்தில் மட்டும் மௌனம் காக்கிறார். இந்தச் சண்டை நிலைக்கு பொன்னையன்தான் காரணம் என்று அவர் கருதுகிறாராம்.

**இ**தற்கிடையில் பொன்னையனின் தொகுதியான திருச்செங்கோட்டில் புகைச்சல் துவங்கிவிட்டது. அதற்குக் காரணம் பொன்னையனின் எடுத்தெறிந்து பேசும் குணமும், கண்டிப்பும்தான் என்கிறார்கள்.

அவரின் ஏறும் செல்வாக்கு, தோட்டத்து தோழிக்கும் அவரது சுற்றத்தாருக்கும் கடுப்பைக் கிளப்பி விட்டதில் ஆச்சர்யம் இல்லை.

முக்குலத்தோர் செல்வாக்கு கோலோச்சும் கழகத்தில், பொன்னையனின் வளர்ச்சி, அதுவும் தேர்தல் சமயத்தில் கொஞ்சமும் விரும்பப்படவில்லை. தமிழக அரசின் நிதிநிலை சீரடைய தமது நிர்வாகத்திறனும் காரணம் என்று பொன்னையன் அதிகாரிகளிடத்திலும், ஆளும் கட்சிப் பிரமுகர்களிடமும் 'லூஸ் டாக்' விட்டது அம்மாவிடம் 'பற்ற' வைக்கப்பட்டது. விரிசல் துவங்கியது. அவை முன்னவராக பேசும் வாய்ப்பு பறிக்கப்பட்டது. மீண்டும் அதே தொகுதியில் நிற்கும் வாய்ப்புக் கிடையாது என்று உணர்த்தப்பட்டது. தமக்கு எதிராக நடக்கும் சூழ்ச்சிகளை உணர்ந்த பொன்னையன், விலகிச் செல்லத் துவங்கினார். இப்போது அணித் தலைவர் பதவி பறிப்பு, ஆட்சி மன்ற உறுப்பினர் பதவி பறிப்பு என்று பொன்னையனைத் துரத்தும் காரியங்கள் நடக்கின்றன. சமாதானத்துக்கு பொன்னையன் தயார். அதைச் செய்ய அதி.மு.க.வில் யாருமில்லை என்பதுதான் நிதர்சனம்.

- **கௌசி**

# TIMBER IS NO MORE A LUXURY

**Treated Rubber Wood is Affordable**
**It is approved for Door, Window & Cupboards under IS code. 12896**

## Seasoning

Fresh cut timber, including Teakwood, contains moisture upto 80%. When we use timber with such high moisture content, the wood starts deshaping in various ways depending on its installed location and the variety of wood.

Ideal moisture content for retaining the shape of the timber is 14% to 18%. Natural seasoning or Air-drying does not bring down the moisture content to less than 35%, even after 2 or 3 years, eventhough the surface appears to be dried.

KILN drying as per IS code 1141, alone can bring down the moisture content to the ideal level of 14% to 18%





## Treatment

To protect the timber from termite attacks we have to give Chemical Treatment. Usually Wood Preservative oil is applied over the surface of the timber for this purpose. The best method to get maximum durability is Pressure impregnation Method. Under this method CCB Chemicals are injected into the wood @ 150 PSI as per IS Code 401.

*Door is not a product of Mere carpentry. Use the wood only after Treatment & Seasoning. Even for Teakwood seasoning is a MUST. Take care Before you make your doors.*

Contact
**MAYURAM TIMBER**
257 G.S.T. Road, Tambaram,
Chennai 600 045 Phone: 22415297, 22411261

**Our Door Prices starts from Rs. 1400/-**

Registered with the Registrar of Newspaper of India under No. 1041/57 * Registered No. TN / CC (S) DN / 144 / 06 - 08 * Licensed to post without prepayment under PMG's Licence No. WPP TN / CC (S) DN / 70 / 06 - 08* Registered as a Newspaper in Srilanka.